சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ

உ

திருச்சிற்றம்பலம்

# காரைக்காலம்மையார்

அருளிச்செய்த

# அற்புதத் திருவந்தாதி




ஓரத்தூர்

## புலவர் கு. குஞ்சிதபாதம் பிள்ளை

அவர்கள்

## மணிவிழா மலர்

சாதாரண ௵ ஆனி

29-6-

15

சிவ சிவ சிவ சிவ சிவ

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# பன்னிரு திருமுறை அருளிய ஆசிரியர்கள் திருப்பெயர்கள்

---

[1]திருஞான சம்பந்தர் [2]வாகீசர் [3]சுந்தரர்
[4]திருவாதவூரர் மற்றைத்
[5]திருமாளிகைத் தேவர் [6]சேந்தனார் [7]கருவூரர்
தெள்ளு [8]பூந்துருத்தி நம்பி
வருஞான [9]கண்டராதித்தர் [10]வேணாட்டடிகள்
வாய்ந்த [11]திருவாலியமுதர்
மருவு [12]புருடோத்தமர் [13]சேதிராயர் [14]மூலர்
மன்னு [15]திருவாலவாயர்
ஒரு [16]காரைக்காலம்மை [17]ஐயடிகள் [18]சேரமான்
ஒளிர் [19]கீரர் [20]கல்லாடர் தாம்
ஒண் [21]கபிலர் [22]பரணர் மெய்யுணர் [23]இளம்
ஓங்கு [24]அதிராவடிகளார் [பெருமானோடு
திருமேவு [25]பட்டினத்தடிகளொடு [26]நம்பியாண்டார்
நம்பி [27]சேக்கிழாரும்
சிவநெறித் திருமுறைகள் பன்னிரண்டருள் செய்த
தெய்விகத் தன்மையோரே.

**வாழியிவ்வையகம்!** **வளர்க நற்சைவம்!!**

இதனைக் கண்ணுறும் மெய்யன்பர்கள்
நித்தியபாராயணம் செய்யும்படி கேட்டுக்கொள்கிறோம்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

காரைக்காலம்மையார்

அருளிச் செய்த

# அற்புதத் திருவந்தாதி

(உரையுடன்)



ஓரத்தூர்

புலவர் திரு. சு. குஞ்சிதபாதம் பிள்ளை அவர்கள்

## மணிவிழா மலர்

சாதாரணஆு ஆனிமீ 15-ஆம் நாள்

29-6-70

# பதிப்புரை

இறைவனருள் பெற்று அவனே தானேயாகிய அந்நெறியில் சித்தம் சிவமாகப் பெற்ற திருமூலர், காரைக்காலம்மையார் முதலிய அருளாசிரியர்கள் திருவாய் மலர்ந்த அருள் நூல்கள் பன்னிரு திருமுறைகளாகும். பன்னிரு திருமுறைகளும் ஓங்காரத்தின் உட்பொருளாகும்.

மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாக வழிபாடு செய்த எங்கள் தந்தையாரின் அறுபதாம் ஆண்டு நிறைவு மணிவிழா மலராகப் பதினோராம் திருமுறையில் காரைக்காலம்மையார் அருளிச்செய்த அற்புதத் திருவந்தாதி என்ற நூல் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துணைப் பேராசிரியர் வித்வான் திருமுறை ஆராய்ச்சிக் கலைஞர் உயர்திரு, க. வெள்ளைவாரணனார் அவர்கள் எழுதிய உரையுடன் வெளிவருகின்றது.

இவ்வுரை எழுதி யுதவிய பேராசிரியர், வித்வான் திருமுறை ஆராய்ச்சிக் கலைஞர், உயர்திரு க. வெள்ளைவாரணனார் அவர்கட்கும் எனது தந்தையாரின் வாழ்க்கை ஓவியமும், உரை நூல் மதிப்புரையும் எழுதி உதவிய சீர்காழி உயர்திரு. வித்வான் த. சுந்தரேசாரியார் அவர்களுக்கும் எங்கள் நன்றி கலந்த வணக்கம் உரியதாகும். எங்கள் முன்னோர் பரம்பரை

யைப் பற்றிச் செய்யுள் எழுதியுதவிய ஆடூர் உயர்திரு. சு. கணபதிப் பிள்ளை அவர்கட்கும், குறித்த காலத்தில் வனப்புடன் அச்சியற்றி உதவிய அழகு அச்சகத்தார்க் கும் எங்கள் நன்றி கலந்த வணக்கம் உரியதாகும். இவற்றிற் கெல்லாம் உறுதுணையாயிருந்து உள்நின் றுணர்த்தி யருளிய இறைவன் திருவருளைச் சிந்தித்து வாழ்த்தி வணங்குகின்றேம்.

இங்ஙனம்,
கு. சேக்கிழார்,
கு. ஆடலரசு,

# உரை நூல் மதிப்புரை

சீர்காழி, புலவர், த. சுந்தரேசன்

ஓரத்தூர் திரு. சு. குஞ்சிதபாதம் பிள்ளை அவர்கள் தம் மணிவிழா மலராகக் காரைக்காலம்மையார் அற்புதத் திருவந்தாதி உரை நூல் வெளியிடுவது மிகவும் போற்றத்தக்கது. உரை எழுதுபவர் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ் ஆய்வுத்துறைப் பேராசியர் வித்வான், திருமுறை ஆராய்ச்சிக் கலைஞர், க. வெள்ளைவாரணனார் அவர்களே. இவர் தமிழகம் அறிந்த தலைசிறந்த புலவர்களில் ஒருவர். எழுத்து, பேச்சு, ஆய்வு முதலிய தமிழ்த் துறைகளில் நிரம்பிய பயிற்சியுடையவர். அவரது ஆழ்ந்த, அகன்ற நுண்மாண் நுழை புலத்திற்கு உரைகல்லெனத் திகழ்வன அவர் எழுதிய நூல்களே. அவர் இலக்கணம், இலக்கியம், சமய நூல் முதலியவற்றில் கற்பன கற்று, அறிவன அறிந்து ஆய்வன ஆய்ந்து தம் புலமையைப் பல நூலளவையால் வெளிப்படுத்தியுள்ளார். கற்பவர் காமுறச் சொற்போர் புரிவதில் முன் நிற்போர் இவர். இவர் ஏறாத பேரவையோ, சங்கமோ, தமிழ்-அரங்கோ இல்லை. அடக்கத்தால் தான் பெற்ற கலைச் செல்வத்திற்கே பெருமை தந்தவர். இவர் எழுதிய உரை நூலைப் படித்துச் சுவைத்தேன், எளிய முறையில் அரிய பொருளை ஆங்காங்கு எழுதியுள்ளார். படிப்பவர்க்குப் பக்திச் சுவையும், தத்துவ உணர்வும், தெய்வப் பற்றும் உண்டாம் அளவு இந்நூல் அமைந்துள்ளது, இவ்வுரை நூலை மதிப்பிட ஓர் உரை கல்லும் வேண்டுமோ?

'பாயிரம் இல்லது பனுவலன்று' என்ற நூலிலக்கணம் குறையாமல் இருக்கவே சிறப்புரை வழங்குகின்றேன்.

பல்லாண்டுகளாகத் தன் உள்ளப் பெட்டகத்தில் சேர்த்து வைத்த கருத்து மணிகள் மின்னி ஒளிரும் வண்ணம் சிந்திக் கிடக்கின்றன. கற்பவர் சிந்தைக்கு விருந்தாய் மெய்ஞ்ஞான நெறிக்கு வழிகாட்டியாக உள்ளது, அம்மையார் அருளிய அற்புதத் திருவந்தாதி யாகும். திருமுறையின் ஒரு பகுதியதாய இவ்வருள் நூல் வாயிலாக மக்கள் மெய்ஞ்ஞானம் பெற்றுய்வார் களாக.

மணிவிழா அமயத்துச் சிவமணம் கமழ மலரும் இவ்வுரை நூற்கு அறிஞர் என்ற வகையிலோ நண்பர் என்ற முறையிலோ சிறப்புரை வழங்கவும், வாழ்க்கை ஓவியம் வரையவும் எனக்குப் பணித்த பேராசிரி யர்க்கும், மணிவிழாத் தலைவருக்கும் என் பணிவார்ந்த நன்றி உரியதாகும்.



ஒரத்தூர்

புலவர் சு. குஞ்சிதபாதம் பிள்ளை - புனிதவதி அம்மையார்

மணிவிழாத் தலைவர் ஒரத்தூர்
## புலவர் சு. குஞ்சிதபாதம் பிள்ளை அவர்களின்

# வாழ்க்கை ஓவியம்

[எழுதியவர்: சீர்காழி, புலவர் த. சுந்தரேசன்]
"அன்னம் பாலிக்கும் தில்லைச் சிற்றம்பலம்"

உலகில் மனிதன் பெறவேண்டிய பேறுகளுள் தலை சிறந்தது மணிவிழாவாகும். பிறப்பின் மாட்சிமையைச் சிறப்பாய்த் தெரிவிப்பதும் அதுவே. பிறந்த ஆண்டினைத் திரும்பக்கண்டு துய்க்கும் இப்பேறு தெய்வ அருளாலன்றி எய்த முடியாது என்பது உறுதி. அன்று குழந்தை உருவாய் இருந்த ஒருவர் இன்று பலர்க்கும் ஆசி வழங்கும் இறைமகனாகி விளங்குவது தவப்பேறே. இத்தகைய பேறுபெற்ற ஒரு சீரிய நேயரைப்பற்றிய வாழ்க்கை ஓவியத்தை வரைந்து காட்ட முன் வந்தேன். அவர்யார்? ஒரத்தூர் புலவர். திரு. சு. குஞ்சிதபாதம்பிள்ளை அவர்களே. புலவராய், பொருளாளராய், கொடையாளராய், தொண்டராய் சிவ நெறிச் செல்வராய்க் காட்சியளிப்பவர் இவர்.

பிறப்பு: கடந்த சாதாரண ஆண்டு ஆனித் திங்கள் பரணி விண்மீன் ஒளிரும் 19-ம் நாளே இவர் பிறந்த நாள். மணிவிழாச் செய்யும் சிறந்த நாளும் இன்றைய சாதாரண ஆண்டே. பிறந்த ஊரோ பொன்னங்கோயில். தந்தையாரோ சுந்தரம்பிள்ளை. தாயார் பெரியநாயகி. உடன் பிறந்தவர் தேவாரத்தை நாவாரப் பாடும் முத்துக்குமரப்பிள்ளை. சகோதரிகள்

இருவர். "தோன்றிற் புகழொடு தோன்றுக" என்னும் பொய்யாமொழியை மெய்ம்மை யாக்கியவர் இவரே. புகழொடு தோன்றுவது எவ்வாறு? என்பது ஐயம். அரும்பாம் அளவில் உள் பொதிந்துள்ள மணம் மலராம் அளவில் வெளிப்படுகின்றது. இளமையில் பிறக்கும்போது உள்ளடங்கிய புகழ் நாளடைவில் பின் வாழ்க்கையில் வெளிப்படும், இதனைத்தான் கருவில் ஊறிய திரு என்பர்.

இம்முறையில் புகழொடு தோன்றிப் புகழொடு வாழ்பவர் இவரே.

கலைமகள் நாட்டம்: நகராமலையில் வித்வான் நா. இராமலிங்கம் பிள்ளை அவர்கள் தமிழ்ப் படிப்புக் கென ஒரு குருகுலம் வைத்து நடத்தினர். அங்குப் படித்தவர்களில் நானும் ஒருவன். அப்போது பிள்ளை யவர்களும் என்னுடன் படிக்க முன்வந்தார். தந்தை யார்க்கு மேலும் படிக்க வைக்கப் பிரியமில்லை, இருந்தா லும் ஓய்ந்த நேரத்தில் படிக்கிற அளவுக்கு அனுமதி கிடைத்தது. இரண்டொரு ஆண்டு முடிந்தது. நான் சிதம்பரம் மீனாட்சித் தமிழ்க்கல்லூரிக்குத் தமிழ் படிக்க வந்தேன். தந்தையார் அவரை அனுப்பவில்லை. படிப்பிற்குத் தடையாயிருக்கிறாரே என்று தந்தைமீது சிறிது வெறுப்புத்தான். நான் மட்டும் படிக்க வந்துவிட்டேன். கலைமகள் நாட்டம் கிடைத்தது. தந்தையார்க்கு மனதில் மாற்றமும் ஏற்பட்டது. மீண்டும் அனுமதி பெற்றுச் சிதம்பரத்தில் வித்துவான் சோழவந்தான் கந்தசாமியார் அவர்க ளிடம் புகுமுக வகுப்பு [என்ட்ரன்ஸ்] படித்தார். தந்தையார்க்கு மனமில்லாமலே படித்துவந்தார். இன்றைய அண்ணாமலைப் பல்கலைக்கழகத்துணைப்

பேராசிரியர் திரு. வெள்ளைவாரணனாரும் அன்று இவருடன் படித்தவர். படிப்படியாக அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் என்னுடன் புலவர் படிப்புத் தொடர்ந்து நான்காண்டு படித்து வித்துவான் பட்டமும் ஆசிரியப் பயிற்சியும் பெற்று ஆசிரியர் பதவிக்கு உரியவரானார். இந்த உயரிய நிலைக்கு வழித்துணையானவர் நகராமலை வித்துவான் இராம லிங்கம் பிள்ளை அவர்களே. இராமநாதபுரம் "சுவாட்ஸ் ஹைஸ்கூல்" என்ற ஓர் உயர்நிலைப்பள்ளி யில் தமிழாசிரியராய் இரண்டரை ஆண்டு வேலையும் பார்த்தார். தந்தையார்க்குச் சிறிது ஆசை ஏற்பட் டது. மைந்தன் பெருமை கண்டு உள்ளத்தில் மகிழ்ந்து வரலானார்.

**திருமகள் நாட்டம்:** கல்வித்துறையில் எல்லை கண்ட பிள்ளை அவர்கட்குத் திருமகள் அருளும் தேடி வருகிறது. வாழ்வில் ஓர் திருப்பம். திடீர் மறுமலர்ச்சி, பிள்ளையவர்கட்குப் பெரிய தந்தையார் ஒருவர் ஓரத் தூரில் பெருந்தனக்காரராய் விளங்கினார். அவர் பெயர் சிவசிதம்பரம் பிள்ளை. அவர் மனைவியார் இராசாம்பா ளாச்சி. எல்லாச் செல்வமும் பொலிய விளங்கி யவர்கட்கு மக்கட் செல்வம் இல்லாத ஓர் குறைதான். அரும்பை நாடிச் செல்லும் சுரும்புபோல நெருங்கிய உறவினர் பலர் அவரைச் சூழ்ந்து வரலாயினர். தன்னையே வளர்ப்புப் பிள்ளையாக ஏற்றுக்கொள்வா ரென எண்ணியவர் பலர். சிவசிதம்பரம் பிள்ளையவர் களோ யாரிடத்தும் முகமலர்ந்து பேசமாட்டார். வந்த வர்கள் யாரிடத்தும் அன்புகாட்டவில்லை. இப்படியே பலரும் வந்துபோனார்கள். அவர் உள்ளத்தை யாரும் அறிய முடியவில்லை. பொருள் கருதி அவர் வீட்டுக்குச் செல்லாதவர் குஞ்சிதபாதம் பிள்ளை ஒருவரே,

பெரியப்பாவிடம் பொதுமை அன்புமட்டும் உடையவர். தொண்டு மனப்பான்மை இருந்ததன்றிச் சொந்தம் பாராட்டுவதில்லை. உள்ளத்தளவில் அவரும் பிள்ளையவர்களிடம் அன்பு வைத்திருந்தாரோ அறியோம். பெரியதந்தையார்க்கு உடல் நிலை குன்றிவந்தது. நிலையாத தன்மையை அடையும் அந்தக்காலத்தில் குஞ்சிதபாதத்தை வரவழைக்கவேண்டுமெனத் தன் மனைவியிடம் மறைமுகமாக உணர்த்தினர். இச்செயல் யாருக்கும் வியப்பைத் தந்தது. அவன் வெளியூரிலே வேலை பார்க்கிருன் என்ருர்கள். தந்தி அனுப்பி வரவழைக்கத் தூண்டினர். வேலையை உதறிவிட்டு அன்று முதல் வளர்ப்புப் பிள்ளையானர். ஆகூழ் முந்திற்று. திருமகளின் அருளும் கிட்டிற்று. தன் சொந்த தந்தையாரின் அனுமதியின் பேரில் ஒரத்தூர் சிவசிதம்பரம்பிள்ளையின் வளர்ப்புப் பிள்ளையானர்.

மன அமைதியோடு இருந்தவர்க்குச் செல்வப் பெருவாழ்வு தேடிவத்தது "பரணியில்பிறந்தவர் தரணி ஆளுவார்" என்பது பொய்யாகுமா? தன் தந்தையின் துணைகொண்டு பெரியம்மாவின் சொற்படி நடந்து வந்தார். கலைமகளும், திருமகளும் அவர் இல்லத்தில் ஒன்றி வாழும் நிலை ஏற்பட்டது. சாதாரண ஆண்டில் பிறந்து சாதாரணக் குடும்பத்தில் வளர்ந்த அவருக்குக் கல்வியாலன்றிப் பொருளாலும் தனிப்பெருஞ் சிறபபு ஏற்பட்டது. கலைவாணரும், புலவரும் செல்வரும் சூழ்ந்தனர். இவரது அன்பு அடக்கம் முதலிய பண்புகளால் பெருமிதத்தை அளிக்கும் பொருளுக்கும் கல்விக்கும் பெருமை கிடைத்தது, 'பெறலரும் திருப்பெற்றபின் சிந்தனை பிறிதாம்' என்பதும் 'செல்வம் வந்துற்றகாலை தெய்வமும் சிறிது பேணர்' என்பதும் உலகியல் வழக்கு. மலைபோல் செல்வம் வந்தாலும்,

தன் நிலையில் மாறினாரில்லை. செல்வப் பெருக்கிற்காகத் தனிவாழ்வை மேற் கொள்ளவில்லை.

குடும்பவாழ்வு : மாணவப்படியை மிதித்து தனி நிலைப் படியையும் தாண்டிக் குடும்ப வாழ்க்கைப் படியில் காலெடுத்து வைத்தார். 1939-ஆம் ஆண்டு பிறந்தது. திருமணமும் நிகழ்ந்தது. பெரியம்மா விருப் பப்படியே அவர்கள் வளர்த்த இடையன்பாற் சொரி இராமச்சந்திரம்பிள்ளை பெண் புனிதவதி என்ற அம்மையைத் திருமணம் செய்துகொண்டார். மனைவியோ கணவனைப் பேணும் குணம் நலம் உடை யவர். மனைமாட்சிக்கான மனைமாட்சியும் உடையவர். கணவன் மனமறிந்து நடப்பவர். சார்ந்தவரைப் பேணும் அருள் குணம் உடையர். விருந்துபசரிப்பதில் பெருந்தன்மை உடையவர். மனிதமாட்சியாவும், மனைவியின் மாட்சியைப் பொறுத்தது. மனைவிளக்காய் வந்த மனைவிக்கு விளக்கமாக மக்கட்செல்வமும் கண் டார். கண்மணியெனச் சொல்லும் நான்கு பெண்மணி களும் இரு ஆண்மகவும் பெற்றார். பெற்ற மக்களால் தக்கார் எனச் சொல்லும், ஒரு பேறும் பெற்றார். அறி வறிந்த மக்களாகவும் வெளிவர முற்பட்டார். 1940-ல் ரிஷிகேசம் முதல் தென்குமரிவரை திருமுறைத் தலங் களை மூன்றுமாத யாத்திரை சென்று குடும்பத்துடன் வழிபாடு செய்துவந்தார். வெளிநாடு சென்று கதிர் காமம், திருக்கோணமலை, திருக்கேதீச்சுரம் முதலிய தலங்களையும் வழிபட்டுள்ளார்.

அறிஞர் கூட்டுறவு : எங்கள் இருவர்க்கும் குரு வாய் விளங்கியவர் நகராமலை வித்துவஜன சேகரர் நா. இராமலிங்கம் பிள்ளை அவர்களே. இளமைப்படிப்பு கற்றதோடு சாத்திரப்படிப்பையும் அவரிடமே கற்றுக் கொண்டார். அவரை அடிக்கடி தம் இல்லத்திற்கு

வரவழைத்து அரிய பெரிய கருத்துக்களைக் கேட்டுத் துய்ப்பார். தமிழை அவர் மறந்தாலும் அவர் "நா" மறந்ததில்லை. சிவபூசை செய்யும் தவநெறிக்குள் செலுத்தியவரும் அவரே கல்விக்கு வழித்துணையா யிருந்த அவரே சிவநெறி பெறும் அருஞ் செல்வத்துக் கும் துணையாயிருந்தார். எத்தகையவர்க்கும் வாழ்க்கை வண்டியில் திருப்புக் கருவியாக ஓர் அறிவுடைச் சான் ரேன் தேவை. இவ்வகையில் இவர்க்குத் துணையாய் விளங்கியவர்கள் R. P. சேதுப்பிள்ளை, சுவாமி விபுலா நந்தர், கா. சுப்பிரமணியபிள்ளை M. A. M. L. காஞ்சீ புரம் முத்து. சு. மாணிக்க வாசகத் தம்பிரான், திருப் பராய்த்துறை சித்பவானந்த சுவாமிகள் முதலியோர் ஆவர். வித்துவான் திருமுறை ஆராய்ச்சிக் கலைஞர் உயர்திரு. க. வெள்ளைவாரணனார் அவர்கள் தமிழ் சமயத்துறையிலும் ஆர்வம் ஊட்டுபவர். மாணவ நிலையிலிருந்த நட்பு இன்னும் மாறவில்லை.

*தொண்டு : பிறந்த ஊர் பொன்னங்கோயில்.* வளர்ந்த ஊர் சி. சாத்தமங்கலம். பெருவாழ்வளித்த ஊர் ஒரத்தூர், உறைவிடமாகக் கொண்டதோ தில்லைப்பதி. தில்லைப்பெருமான் எல்லையிலிருந்து அவர் திருவருளைப் பெறும் நோக்குடன் அப்பதியில் ஒரு வீடு வாங்கினார் அகற்துத் திருவருளகம் என்று பெயரிட் டார். மற்றவர்போல ஆடம்பரத்திற்காகத் தில்லையில் தங்கவில்லை. மனிதப்பிறவி எடுத்தது தில்லைத் தரிசனத் திற்காகவே என்ற நாவரசர் வழியில் நடப்பவர். செல் வத்துப் பயன் ஈதலே என்பதுணர்ந்து இல்லோர்க்கு ஈந்தும். இறைபணி, தமிழ்ப்பணி புரிந்தும், புலவர்களைப் போற்றியும், செழுங்கிளை தாங்கியும் செல்வத்திற்கே பெருமை தந்துள்ளார். ஒரத்தூர், பரதூர், சிதம்பரம் முதலிய தலங்களில் சிவபூசை கட்டளை முன்னோர்

களால் நியமித்துள்ளவற்றை நடத்தி வருகிறார். இல்லை என்றுரைப்போர்க்கு இல்லை என்று சொல்லாத இதயமுடையவர். பெருவாழ்வு கிடைத்ததும் பிறந்த ஊரையும் சிறந்த நட்பையும் பெற்றோரையும், மறப்பார் சிலர். பிறந்த ஊரை மறவாதிருக்க மகா சாத்தனூர் வரலாறு என்ற நூல் எழுதி அவர் குருவாகிய நா. இராமலிங்கம் பிள்ளை அவர்களால் எழுதப்பெற்ற பதிகத்தையும் அச்சிட்டு வெளியிட்டார்.

பிறந்த ஊர் செந்நெல் கொழிக்கும் பொன்னங்கோவில். அவ்வூரிலே தன் பெரியம்மா இராசாம்பாளாச்சி பேரில் ஒரு உயர் துவக்கப்பள்ளி ஏற்படுத்தியுள்ளார். சுற்றுப்புறத்திலுள்ளவர்க்கு அப்பள்ளி மிகவும் பயன்படுகிறது. தனக்கு வாழ்வளித்த ஊராகிய ஒரத்தூரை நிலைத்த இடமாகக் கொண்டு திருப்பணி செய்து வருகிறார். தம் உறைவிடமாகிய தில்லையம்பதியிலே தமிழ் மணம் வீசும் பேரவையிலும் சிவமணம் பொலியும் சங்கத்திலும் திருமுறைக்கழகத்திலும் பங்கெடுக்கிறார். பொன்னங்கோயில் பள்ளிக்கு நஞ்சை நிலம் ½ ஏக்கர் நன்கொடை வழங்கியுள்ளார். ஒரத்தூர் மருத்துவமனைக்கு ½ ஏக்கர் புஞ்சைமனையும் காந்தி தொழில் நிலையத்திற்கு ஒரு ஏக்கர் புஞ்சை நிலமும் நன்கொடை வழங்கியுள்ளார்.

நூல் வெளியீடு: நகராமலை நாட்டரார் குடும்பத்திலுள்ள முன்னோரால் எழுதிவைத்த மாட்டு வாகடம் என்னும் சிறு நூலையும் நா. இராமலிங்கம் பிள்ளை அவர்களால் இயற்றப்பெற்ற தில்லை நவமணி மாலையையும், அவர்பால் ஏட்டளவில் இருந்த மெய்ஞ்ஞான சாரம் என்ற நூலையும் அச்சிட்டு வெளியிட்டுத் தம் குருபக்தியை வெளிப்படுத்தினார். இப்படி வாய்ப்பு

நேரும்போதெல்லாம் தமிழ்ப்பணி புரிவது இவரது இயல்பு. புலவரை ஆதரிப்பதில் பெரு விருப்புடையவர். சொந்த தந்தை தாயாரைக் கடைசிவரையில் மனம் கோணுது பேணிவந்தார். இம்மைக்கான செல்வம் யாவும் இனிதே பெற்றவர். செல்வன் கழல் ஏத்தும் செல்வத்தை நாடி இறைவனைப் பொறுமையுடன் வழிபடுபவர். முப்பான் ஆண்டளவில் தன்னுள் தப்பாமல் பெறவேண்டிய சிவஞானச்செல்வம் பெற முற்பட்டார். சிவதீட்சை பெற்றுச் சிறந்த பெரியோரிடத்துச் சிவபூசை செய்யும் பேறு பெற்ருர். பல்வித மான செல்வச்சூழ் நிலையில் வாழும் இவர் சிவபூஜை செய்வதைத் கடப்பாடாக எண்ணி நடப்பது வியப் பல்லவா! எத்துறையில் சென்ருலும் சிந்தையைச் சிவன்பால் வைத்து வழிபாடு செய்கிருர்.

**மணிவிழாக் காட்சி :** இம்மை நலம் யாவும் பெற்றவர். அம்மை நலத்திற்கான மணிவிழாத் தலைவரானுர். குட நீராட்டும், பலர் பாராட்டும் பெற்றுப் புத்தாடை அணிந்த பொன்ஞர் மேனியராய்த் தன் மனைவியோடு சிவனும், சத்தியும்போல் காட்சிதந்து மக்கள் சுற்றம் முதலியவர்க்கு ஆசி வழங்கும் நிலையிலுள்ளார். வள்ளுவர் வகுத்த வாழ்க்கை நெறியில் நின்று வையத்தில் வாழ்வாங்கு வாழ்ந்து ஏனைய செல்வர்க்கு முன்மாதிரியாய் விளங்குகிருர். தன்னடைந்தார்க்கு இன்பந்தரும் பொன்னம்பலநாதன் பொற் கழல் ஏத்தி ஆயிரம் பிறைகாணும் பேறு பெற்று வாழ்க! பல்லாண்டு வாழ்க! அவர் குடும்பம் பொற் கோட்டிமயமும் தென் தமிழ்ப் பொதியமும் போல நன்கு வாழியவே!

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

உரத்தூர், சிவபூசைச் செல்வர்

## குஞ்சிதபாதம் பிள்ளை அவர்களின் மணிவிழா

# வாழ்த்துப் பஞ்சரத்தினம்

1. "பொன்னம் பலத்தின் மேற்பாலாம்
பொன்னங் கோயிற் பழங்குடியின்
மன்னும் வேளாண் குலமரபன்;
வாழ்கோத் திரவஞ் சரமுடையான்;
பன்னும் அரங்க நாதன்பால்,
பராவு சுப்ர மணியனவன்,
பின்னோன் சீனி வாசனெனப்,
பிறங்கும் இருவர் பிறந்தனரே."

2. "மூத்தோன் சுப்பிர மணியனவன்,
முத்தீக் கையுமுறை பெற்றனனை
ஏத்தும் பூசை செய்பலனால்
எழில்சேர் சிவசி தம்பரமும்
கூத்தன் அருளார் சுந்தரமும்
குலவப் பிறந்தார் இளையவற்கே
பூத்தார், முத்துக் குமரனொடும்
புலவர் குஞ்சித பாதமுமே."

3. "உரத்தூர் வாழ்சிவ சிதம்பரனும்
உத்த மற்கே யபிமானன்;

பரத்தின் கல்வி அறிவுள்ளோன்;
பரமன் அடியே சிந்திப்போன்;
கரத்தின் பயனும் இதுவெனவே
கடவுட் பூசை கைக்கொண்டோன்;
வரத்தின் வருகுஞ் சிதபாதன்,
மனையாள் புனித வதிப்பெயராள்;"

4\. "அற்புதன் பூசை செய்யும்
அருங்குணக் *கணவற் பெற்றாள்;
இற்புடைப் பணிகள் செய்வாள்;
இறையடி யவர்கள் ஏற்ப
பொற்புடன் முகமன் செய்வாள்;
போனகம் ஊட்டுஞ் சீராள்;
கற்பினுக் கரசி யாவாள்;
கருதுமீ ரெண்பே றுற்றாள்;"

5\. "பொன்னின் நாண்சேர் புனிதவதி
பொருந்தும் ஆறு பத்தாண்டு
மன்னும் விழாப்போல் தில்லைநகர்,
மருவு பரதூர் கோயில்கட்கும்
பன்னும் அறங்கள் கலைக்கோயில்
பலசெய் குஞ்சித பாத! நீர்
பொன்னம் பலவன் அருட்புகழும்
பொருந்த வாழி! வாழியரோ!"

"வாழி! சிவநெறி; வாழி! சிவ இயல்;
வாழி! சிவகுரு; வாழி! உலகமே."

ஸ்ரீ சிவஞான திருத்தனி,
சிதம்பரம்.
29—6—70

இங்ஙனம்:
ஆ. சு. கணபதிப் பிள்ளை,
தில்லைத் திருமுறைக் கழகத் தலைவர்.

உ

திருச்சிற்றம்பலம்

**காரைக்காலம்மையார்**

அருளிச்செய்த

# அற்புதத் திருவந்தாதி

---

சிவபெருமான் திருவருளால் 'வானமும் மண்ணு மெல்லாம் வணங்குபேய் வடிவம்' பெற்ற காரைக்கால் அம்மையார் முதன்முதல் திருவாய் மலர்ந்தருளிய சிறப்புடைய பிரபந்தம் அற்புதத் திருவந்தாதி என்பதாகும். அற்புதம் என்பது யாவரும் வியந்து போற்றுதற்குரிய உணர்வரிய மெய்ஞ்ஞானம் என்ற பொருளைத் தருவதாகும். 'அற்புதமூர்த்தி' எனவரும் நன்னூற் சிறப்புப் பாயிரத் தொடர்க்கு 'ஞானமே திருமேனியாகவுடையான்' என எழுதப் பெற்ற உரைப்பகுதி இங்கு ஒப்புநோக்கத் தகுவதாகும். இறைவனருளால் தம் உள்ளத்தில் தோன்றிய சிவஞானத்தின் ஒருமைப்பாட்டினால் உமையொருபாக னாகிய இறைவனது பொருள்சேர் புகழை விரித்துப் போற்றிய அந்தாதியாதலின், இ·து அற்புதத் திருவந்தாதி யென்னும் பெயர்த்தாயிற்று. இந்நுட்பம்,

'உற்பவித்தெழுந்த ஞானத்தொருமையின்
உமைகோன் தன்னை
அற்புதத் திருவந்தாதி அப்பொழு தருளிச்
செய்வார்'

[காரைக்காலம்மையார் புராணம் 52]

எனவரும் பெரிய புராணத் தொடரால் இனிது புலனாதல் காணலாம்.

உ

# காரைக்காலம்மையார்

அருளிச் செய்த

# அற்புதத் திருவந்தாதி

---

திருச்சிற்றம்பலம்

பிறந்து மொழி பயின்ற பின்னெல்லாங் காதல்
சிறந்துநின் சேவடியே சேர்ந்தேன்—நிறந்திகழும்
மைஞ்ஞான்ற கண்டத்து வானோர் பெருமானே
எஞ்ஞான்று தீர்ப்ப திடர். (1)

இ—ள்: (நீல) நிறமுடையதாய் விளங்கும் நஞ்சக்கறை தங்கிய திருமிடற்றினையுடைய தேவர் பிரானே, (எளியேன் இவ்வுலகில் மகவாய்ப்) பிறந்து மொழியினைப் பயின்று பேசத்தொடங்கியகாலம் முதற் கொண்டு (இறைவனாகிய நின்பால்) அன்பினாற் சிறந்து நின் திருவடிகளையே (மனமொழிமெய்களால்) இடைவிடாது எண்ணிப்போற்றி வழிபடுகின்றேன். எனது (பிறவித்) துன்பத்தைத் தீர்த்தருள்வது எப்போது? எ-று.

காரைக்காலம்மையார் மணலாற் சிறுவீடு கட்டி விளையாடும் தம் இளம்பருவத்திலேயே சிவபெருமான் திருவடிகளுக்குத் தொண்டுபட்டொழுகும் பேரன்

புடையராய் இறைவனது பொருள்சேர் புகழாகிய திருவார்த்தைகளைப் பேசும் பயிற்சி பெற்றிருந்த செய்தியை "வண்டல் பயில்வன வெல்லாம் வளர் மதியம் புனைந்தசடை, அண்டர்பிரான் திருவார்த்தை யணைய வருவன பயின்று, (காரைக்காலம்மையார் புராணம் 5)என வரும் தொடரில் ஆசிரியர் சேக்கிழார் தெளிவாக் குறித்துள்ளார். சேர்தல் - மனமொழி மெய் களாகிய முக்கரணங்களாலும் அடைதல், மை - கருமை; ஈண்டு நஞ்சக்கறையினை யுணர்த்தியது. ஞாலுதல்-தொங்குதல், தங்குதல் என்ற பொருளில் இங்கு ஆளப்பட்டது.

இடர்களையா ரேனும் எமக்கிரங்கா ரேனும்
படரு நெறிபணியா ரேனும் —சுடருருவில்
என்பறாக் கோலத் தெரியாடு மெம்மானார்க்
கன்பறா தென்னெஞ் சவர்க்கு. (2)

இ-ள் : (இறைவர்) எனக்கு நேரும் இடையூறுகளை நீக்காராயினும் (யாம் படும் துயர்கண்டு) எப்பொருட்டுத் திருவுளம் இரங்கியருளாராயினும் (யாம்) உள்ளத்தால் நினைந்து கடைப் பிடித்தற்குரிய நல்வழி இதுவென எமக்குக் காட்டியருளாராயினும், ஒளியுருவில் என்புமாலை விலகாது விளங்கும் திருக் கோலத்துடன், ஆடல் புரிந்தருளவல்ல எம்பெருமானாரும் எனது நெஞ்சத்தில் எக்காலத்தும் நீங்காது எழுந்தருளியிருப்பவரும் ஆகிய அவர்பால் யான் வைத்துள்ள அன்பு ஒருபொழுதும் குறையாது-எ-று.

இனி எம்மானாராகிய அவர்க்கு என்நெஞ்சு அன்பு அறாது என இயைத்துரைத்தலும் ஆம். படர்தல்- நினைத்தல்; செல்லுதல்.

அவர்க்கே யெழுபிறப்பும் ஆளாவோம் என்றும்
அவர்க்கேநாம் அன்பாவ தல்லாற்—பவர்ச்
சடைமேற்
பாகாப்போழ் சூடு மவர்க்கல்லால் மற்றொருவர்க்
காகாப் போம் எஞ்ஞான்றும் ஆள். (3)

இ-ள் : (என் நெஞ்சத்தவராகிய) அவ்விறை வர்க்கே எழுமை எழு பிறப்பும் ஆட்செய்வோம். நாம் எக்காலத்தும் அவர்க்கே அன்பு செய்வதோடல்லாமல், கொடிபோல் விரிந்து படர்ந்த சடையின்மேல் (ஒருவாற்) பகுக்கப்படாத பிறைத் துண்டத்தைச் சூடிய அவ்விறைவர்க்கல்லால் எக்காலத்தும் வேறொருவர்க்கும் ஆளாகமாட்டோம். எ-று.

அவர்க்கே - மேலைத்திருப்பாட்டில் குறித்தவண்ணம் எனது நெஞ்சத்தவராகிய அவ்விறைவர்க்கே. எழுபிறப்பு - எழுவகைப் பிறப்புக்கள், பவர் —கொடி பகா என்றசொல் பாகா என முதல் நீண்டது, பகா - பகுக்கப்படாத, போழ் பிளவு, பிறைத்துண்டம், வாகாப் போழ் சூடும் என்றும் பாடம். வாகு-அழகு, அவர்க் கல்லால் மற்றொருவர்க்கு ஆள் ஆகாப்போம் என இயைக்க, ஆகாப்போம் - ஆகமாட்டோம்.

ஆளானோம் அல்ல லறிய முறையிட்டாற்
கேளாத தென்கொலோ கேளாமை — நீளாகஞ்
செம்மையா னாகித் திருமிடறு மற்றொன்றாம்
எம்மையாட் கொண்ட இறை. (4)

இ—ள் : நீண்டுயர்ந்த திருமேனி முழுவதும் செந்நிறமுடையோனாகித் திருமிடறு மட்டும் வேறொரு நிறமாகப் பெற்று, எங்களை அடிமை கொண்ட

இறைவன், தன் திருவடிக்குத்தொண்டுபட்ட அடியார் களாகிய நாங்கள் எங்கள் துன்பத்தையறியும் படி எடுத்துக்கூறி முறையிட்டால் அம்முறை யீட்டைத் திருச் செவியாற் கேளாமைக்கும் எமக்கு உறவாகா மைக்கும் காரணம் யாதோ? எ-று.

'கேளாததும் கேளாமையும் என்கொலோ' என ஈரிடத்தும் உம்மை விரித்துரைக்க. கேளாகாமை என்ற தொடர் கேளாமை என மருவியது.கேளாகாமை –உறவாகாமை.

இறைவனே யெவ்வுயிருந் தோற்றுவிப்பான் தோற்றி
இறைவனே யீண்டிறக்கஞ் செய்வான்—இறைவனே
எந்தாய் எனவிரங்கும் எங்கள்மேல் வெந்துயரம்
வந்தால் அதுமாற்று வான். (5)

இ-ள் (எப்பொருளிலும் நீக்கமறத்தங்குதலால்) இறைவன் என்ற காரணப் பெயரினையுடைய கடவுளே எல்லாவுயிர்களுக்கும் உடல், கருவி, உலகு நுகர்பொருள் என்பவற்றைப் படைத்தளிக்க வல்லவன். தன்னால் தோற்றுவிக்கப்பெற்ற அவற்றை மீண்டும் ஒடுக்குதலைச் செய்பவனும் அவ்விறைவனே. எமது தந்தையே என அன்பினாற் பரிந்து வேண்டும் எங்கள்மேல் கொடிய துன்பங்கள் வந்து வருத்துங்கால் அவற்றை அறவே நீக்கி எங்களை வாழ்விப்பவனும் அம்முதல்வனே. எ-று.

படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத் தொழில்களையும் செய்து எவ்வுயிர்க்கும் அருள்புரிய வல்ல தனி முதல்வன் இறைவன் ஒருவனே என்பது கருத்து.

வானத்தா னென்பாரு மென்கமற் றும்பர்கோன்
தானத்தா னென்பாருந் தாமென்க—ஞானத்தான்
முன்னஞ்சத் தாலிருண்ட மொய்யொளிசேர்
கண்டத்தான்
என்னெஞ்சத் தானென்பன் யான். (6)

இ-ள்: முற்பட்டெழுந்த நஞ்சினையுண்டாக்கிய பேரொளியுடன் மிளிரும் திருமிடற்றையுடையவனும் ஞானமே திருமேனியாகயுடையவனும் ஆகிய இறைவன் (நம்மனோரால் அணுக வொண்ணாத) பரவெளியில் உள்ளான் என்றும் தேவர் தலைவன் வாழும் இடமாகிய தேவருலகில் உள்ளான் என்றும் சொல்லுவார் சொல்லுக. அவ்விறைவன் (அன்பர்க்கு அருள் புரியும் நிலையில்) எனது நெஞ்சமாகிய அணிய இடத்தில் இருக்கின்றான் என்றே யான் துணிவாகக் கூறுவேன். எ-று.

'நினைப்பவர் மனங் கோயிலாக் கொண்டவன்' (திருக்குறுந்தொகை) எனவும் 'சிறைவான் புனற்றில்லைச் சிற்றம்பலத்தும் என் சிந்தையுள்ளும், உறைவான்' (திருக்கோவையார்) எனவும் வரும் அருளுரைகள் இங்கு நினைக்கத்தக்கன.

யானே தவமுடையேன் என்னெஞ்சே நன்னெஞ்சம்
யானே பிறப்பறுப்பான் எண்ணினேன்—யானேயக்
கைம்மா வுரிபோர்த்த கண்ணுதலான் வெண்ணீற்ற
அம்மானுக் காளாயி னேன். (7)

இ-ள்: ஒரு கையுடன் கூடிய விலங்காகிய அம் மதயானையை உரித்துப் போர்த்த நெற்றிக் கண்ணனும் திருவெண்ணீறணிந்தவனும் ஆகிய

அவ்விறைவனுக்கே யான் ஆளாயினேன். (ஆதலால்) யானே தவமுடையேன் ஆயினேன். (அப்பெருமானை இடைவிடாது எண்ணிப் போற்றுதலால்) எனது நெஞ்சமே நல்ல நெஞ்சமாயிற்று. (அவனது திருவருள் வழி நிற்றலால்) யானே பிறவித் தொடர்ச்சியை யறுத்தற்கு எண்ணும் மனவுறுதி யுடையேனாயினேன். எ-று.

ஆயினேன் ஆள்வானுக் கன்றே பெறற்கரியன்
ஆயினேன் அஃதன்றே யாமாறு—தூய
புனற்கங்கை யேற்றானோர் பொன்வரையே
போல்வான்
அனற்கங்கை யேற்றான் அருள். (8)

இ-ள்: தூய நீராகிய கங்கையைச் சடையில் ஏற்றியருளியவனும் தீயினை அழகிய கைத்தலத்தில் ஏந்தியவனும் ஆகிய இறைவனது திருவருளால் (எல்லாவுயிர்களையும்) ஆள்வானாகிய அவ்விறைவனுக்கு ஆளாயினேன். (அவனுக்கு அடிமை பூண்ட) அப்பொழுதே பெறுதற்கரிய பெருமானாகிய அவனோடு வேறன்றி ஒன்றுபட்டு அவனது திருத்தொண்டில் வழுவாது நிற்பேனாயினேன். உயிர்கள் உய்திபெறும் நன்னெறியாவது அதுவல்லவா?

அனலைக் கையிலேந்தியவனாகிய அவனது அருளால் ஆள் ஆயினேன் என முடிக்க. மேலைத் திருப்பாடலில் 'ஆளாயினேன்' என முடித்து, அதன் இறுதியிலுள்ள ஆயினேன் என்ற சொல்லையே இப்பாடலுக்கு முதலாகக் கொண்டமையால் ஆயினேன் என்பதற்கு ஆளாயினேன் எனப் பொருள்

கூறப்பட்டது. பெறற்கரியனாதல்-பெறுதற்கரிய சிவ பரம் பொருளோடு ஒன்றித்து நின்று பணி புரிதல். ஏகனாகி இறைபணி நிற்றல் என்பர் மெய்கண்டார்.

அனற்கு-அனலை; உருபு மயக்கம். அனல் கம் கையேற்றான் எனப் பிரித்து நெருப்பையும் தலையோட்டினையும் கையில் ஏந்தியவன் எனப் பொருள் கூறலும் பொருந்தும். அருள்-அருளால் என மூன்றாமுருபு விரித்துரைக்க.

அருளே யுலகெலாம் ஆள்விப்ப தீசன்
அருளே பிறப்பறுப்ப தானால் — அருளாலே
மெய்ப்பொருளை நோக்கும் விதியுடையேன் எஞ்ஞான்றும்
எப்பொருளு மாவ தெனக்கு. (9)

இ-ள்: சிவசக்தியாகிய திருவருளே உலகம் எல்லாவற்றையும் ஆள்விப்பதாகும். உயிர்களின் பிறவிப் பிணிப்பினை வேருடன் அறுத்தொழிப்பதும் அவ்விறைவனது திருவருளே என்பதனை உளங் கொள்வேனானால் திருவருளாகிய அதன் துணை கொண்டே மெய்ப்பொருளாகிய முதல்வனை உள்ளவாறு கண்டு வழிபடும் நற்பேறுடையனாவேன். அடியேற்கு எக்காலத்தும் எல்லாப் பொருளாகவும் நின்று துணைபுரிவது அத்திருவருளேயாகும்.

விதி-நல்லூழ்.

எனக்கினிய வெம்மானை ஈசனை யான் என்றும்
மனக்கினிய வைப்பாக வைத்தேன் — எனக்கவனைக்
கொண்டேன் பிரானாகக் கொள்வதுமே யின்புற்றேன்
உண்டே யெனக்கரிய தொன்று. (10)

இ-ள் ; எனக்கு இனிமை தரும் என் தந்தையும் எல்லார்க்கும் ஈசனும் ஆகிய இறைவனை எக்காலத்தும் இனிமை தரும் சேம நிதியாக என் உள்ளத்துள் போற்றி வைத்தேன். அப்பெருமானையே என் தலைவனாகக்கொண்டேன். அங்ஙனம் கொண்ட அளவிலேயே பிறவித்துயர் நீங்கிப் பேரின்பம் கைவரப் பெற்றேன். அடியேற்குக் கிடைத்தற்கரியதொன்றுண்டோ? (எல்லாம் எளிதிற் கிடைக்கும்) எ-று.

வைப்பு-சேமநிதி. அவனை எனக்குப் பிரானாகக் கொண்டேன் என இயைக்க. கொள்ளுதல்-உறுதியாகக் கடைப்பிடித்து ஒழுகுதல்.

ஒன்றே நினைந்திருந்தேன் ஒன்றே துணிந்தொழிந்
தேன்
ஒன்றேயென் உள்ளத்தி னுள்ளடைத்தேன்—
ஒன்றேகாண்
கங்கையான் திங்கட் கதிர்முடியான் பொங்கொளி
சேர்
அங்கையாற் காளா மது. (11

இ-ள்: ஒன்றையே என் மனத்தில் இடைவிடாது நினைந்திருந்தேன். ஒன்றாகிய அதுவே வேண்டத்தக்கதென்னுந் துணிபுடையேனாகி ஏனையவற்றை விட்டொழித்தேன். ஒன்றாகிய அதனையே உறுதிப்பொருளாக என்னுள்ளத்திற் கொண்டேன். அத்தகைய ஒன்று என்பது, கங்கையாற்றைத் தாங்கியவனும் திங்களைச் சூடி ஒளிதிகழும் திருமுடியையுடையவனும் சுடரின் ஒளிமிகுந்து விளங்கும் அழகிய கையினையுடையானும் ஆகிய சிவபெருமானுக்கு ஆட்படுதலாகிய அதுவேயாம் என அறிவாயாக. எ-று.

கங்கையான் என்றமையால் உலகிற்கு வேண்டும் நீரினைத் தந்து படைத்தலும், திங்கட்கதிர் முடியான் என்றமையால் எவ்வகைப் பொருள்களையும் தத்தம் காலவெல்லையில் தேயாது நிலைபெற வைத்துக் காத்தலும், பொங்கொளிசேர் அங்கையான் என்றமையால் அங்ஙனம் தோன்றிநின்ற எவ்வகைப் பொருள்களையும் அழித்து ஒடுக்குதலும் என இறைவன் செய்யும் முத்தொழில்களும் குறிப்பான் உணர்த்தப்பட்டமை யுணர்க. ஆளாம் அது ஒன்றே நினைந்திருந்தேன், துணிந்தொழிந்தேன், உள்ளத்தினுள் அடைத்தேன் என இயைக்க. நினைந்திருத்தல் என்றது கேட்டல் சிந்தித்தலையும், துணிதல் என்றது தெளிதலையும், உள்ளத்தினுள் அடைத்தல் என்றது நிட்டை கூடலையும் குறிக்கும் என்பர். ஒளியுடையதீயினை ஒளியென்றார்.

அதுவே பிரானாமா றுட்கொள்ளு மாறும்
அதுவே யினிதறிந்தோ மானால்—அதுவே
பனிக்கணங்கு கண்ணியார் ஒண்ணுதலின் மேலோர்
தனிக்கணங்கு வைத்தார் தகவு. (12)

இ-ள்: (மேற்கூறியவாறு இறைவனுக்கு ஆட்படுதலாகிய) அவ்வுபாயமே இறைவன் நம் பெருமானாகத் தோன்றி நம்மை ஆண்டருளுதற்குரிய தகுதியை நமக்கு நல்குவதாகும். அவ்வுபாயத்திற்கும் மூல காரணமாவது எதுவென ஆராய்ந்துணர்வோமானால் குளிர்ச்சியுற்று அசையும் நிலையில் கொன்றை மலராலாகிய முடிமாலையை யணிந்தவரும் ஒளிதங்கிய நெற்றியின்மேல் ஒப்பற்றதொரு கண்ணை வைத்தருளியவரும் ஆகிய இறைவர்க்கேயுரிய திருவரு

ளாகிய பெருந்தகைமையே யென்பது இனிது புலனுகும். எ-று.

அதுவே—ஆளாதலாகிய ஒன்றையே நினைந்திருத்தலும், துணிதலும், உள்ளத்திற் செறித்தலும் ஆகிய அவ்வுபாயமே. இரண்டாமடியில் அதுவே யென்றது, அவ்வுபாயம் கைவரப்பெறுதற்குரிய மூல காரணமாகிய திருவருளை. ஈற்றடியிலுள்ள தகவு என்பதனை அதுவே என்னும் தனிச் சொல்லுடன் இயைத்துரைக்க. தகவு-திருவருளால் எளிவந்து தோன்றி எல்லாவுயிர்களையும் உய்வித்தருளவல்ல பெருந்தகைமை. 'நகவே ஞாலத்துட் புகுந்து நாயேயனைய நமையாண்டதகவேயுடையான்' என்பது திருவாசகம். 'பனிக்கு அணங்கு கண்ணி' என்ற தொடர்க்கு, குளிர்ச்சி பொருந்திய கார் காலத்தில் மலரும் கொன்றை மலர்மாலை எனவும், கங்கையின் குளிர்ச்சிக்கு வருந்தும் கொன்றை மலர்மாலை எனவும் பொருள் கூறுதலும் உண்டு. ஒள் நுதலின்மேல் ஓர் தனிக்கண் அங்கு வைத்தார் எனப் பிரித்துரைக்க.

தகவுடையார் தாமுளரேற் றுரகலஞ்சாரப்
புகவிடுதல் பொல்லாது கண்டீர்—மிகவடர
ஊர்ந்திடுமா நாகம் ஒருநாள் மலைமகளைச்
சார்ந்திடுமேல் ஏபாவந் தான். (13)

இ-ள்: நுமது திருமேனியில் ஊர்ந்து செல்லும் பாம்பானது என்றேனும் ஒருநாள் நும் இடப் பாகத்திலுள்ள மலைமகளாகிய உமாதேவியாரைச் சினந்து அடருமாயின் அந்தோ துன்பமாய் முடியுமன்றோ?(ஆதலால்) காதலால் நும்மைச் சாரும் தகுதி

யுடையோர் யாரேனும் நும்மையணுகவருவா ருள ராயின் தாரணிந்த நுமது திருமார்பிற் சாரும்படி அவர் களைப் புகவிடுதல் தீங்கு பயக்கும் என்பதனையறிவீராக. எ—று.

தானே தனிநெஞ்சந் தன்னை யுயக்கொள்வான்
தானே பெருஞ்சேமஞ் செய்யுமால் — தானேயோர்
பூணாகத் தாற்பொலிந்து பொங்கழல்சேர் நஞ்சுமிழு
நீணாகத் தானை நினைந்து. (14)

இ-ள்: தானே ஒரு சார்பும் பெறாது தனிமை யுற்ற நெஞ்சம். (என்னெஞ்சமாகிய அது) தன்னை உய்வித்தல் கருதி, தனது உடம்பின் ஒளியுடைய தோற்றத்தால் தானோர் அணிகலனாகப் பொலிந்து தோன்றி மிக்கு எரியும் தீயினியல் அமைந்த கொடிய நஞ்சினைக் கக்கவல்ல நீண்ட நாகத்தினையணிந்தருளிய வனாகிய சிவபெருமானை இடைவிடாது நினைந்து தானே தனக்குரிய பெரிய பாதுகாவலைச் செய்துகொண்டது. எ-று.

'தானே ஆகத்தால் ஓர் பூண் (எனப்) பொலிந்து பொங்கு அழல் சேர் நஞ்சுமிழும் நீள்நாகம்' என அதன் தோற்றப்பொலிவும் கொடுந்தன்மையும் ஒருங்கு உணர்த்தியவாறு. தனி நெஞ்சமாகிய தான், தன்னை உய்யக்கொள்வான் நீள்நாகத்தானை நினைந்து, தானே பெருஞ்சேமம் செய்யும் எனமுடிக்க. இதனால் நெஞ்சத் தின் எளிமையும் அதன் அரிய முயற்சியும் உணர்த்தப் பெற்றமையறிக.

நினைந்திருந்து வானவர்கள் நீண்மலராற் பாதம்
புனைந்தும் அடிபொருந்த மாட்டார் — நினைந்திருந்து

மின்செய்வான் செஞ்சடையாய் வேதியனே யென்கின்றேற்
கென்செய்வான் கொல்லோ வினி. (15)

இ-ள். தேவர்கள் (உயர்வறவுயர்ந்த இறைவனது பெருமையை) நினைந்து (அவனை வழிபடும் வழிபாட்டில்) ஈடு பட்டிருந்து மிக்க நறுமலர்களால் அருச்சித்துப்போற்றியும் அப்பெருமானது திருவடியினை உள்ளவாறு பொருந்தி மகிழுமாறு அறிந்திலர். (அங்ஙனமாகவும், இறைவனது பெருமையையும் எனது சிறுமையையும்) நினைந்து செயலற்றிருந்து மின்னலொடு விளங்கும் செவ்வானத்தை யொத்த சிவந்த சடையினையுடையவனே, வேதப்பொருளாய் விளங்குபவனே என (இவ்வாறு சொல்லளவிற்) போற்றியிருக்கும் எளியேற்கு இனி அப்பெரியோன் எங்ஙனம் அருள் செய்வானோ? எ-று

வானவர்கள் செய்யும் சிறப்புடைய பூசனைக்கும் எளிவந்தருளாத இறைவன், எளியேனது போற்றுதலுக்கு எங்ஙனம் எளிவந்தருள்வான் என இரங்கிக் கூறியவாறு.

இனியோ நாம்உய்ந்தோம் இறைவன்தாள் சேர்ந்தோம்
இனியோ ரிடரில்லோம் நெஞ்சே - யினியோர்
வினைக்கடலை யாக்குவிக்கு மீளாப் பிறவிக்
கனைக்கடலை நீந்தினோங் காண். (16)

இ-ள். நெஞ்சமே, இப்பொழுதோ நாம் இறைவனது திருவடியாகிய புணையினை (தெப்பத்தினை)ச் சேரப்பெற்றோம். (ஆதலால்)உய்திபெற்றோம்.

இனி எத்தகைய துன்பமும் இல்லோமாயினோம். இனி இரு வினைகளுக்கும் வன்மையை விளைவிக்கும் இடையறாத பிறவியாகிய ஒலித்தலமைந்த பெருங்கடலை நீந்திக் கடந்தோமாயினோம். எ-று.

இறைவனது தாளாகிய புணையைச் சேர்ந்தோர் பிறவியாகிய பெருங்கடலைக் கடந்து வீடு பேற்றுய்தல் உறுதியாகலின் 'இறைவன் தாள் சேர்ந்தோம் பிறவிக் கடலை நீந்தினோம்' என இறந்த காலத்தாற் கூறினார். 'அறவாழியந்தணன் தாள் சேர்ந்தார்க்கல்லாற், பிற வாழி நீந்தலரிது' எனவும், 'பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார், இறைவனடி சேராதார்' எனவும் வரும் திருக்குறள்கள் இத்திருப்பாடலுடன் ஒப்பு நோக்கத் தக்கன. வினைக்கு அடலை ஆக்குவிக்கும் மீளாப் பிறவிக்கடல் எனப்பிரித்துரைக்க. அடல் - வன்மை. கனைகடல் - ஒலிக்கும் கடல்; ஈண்டு எதுகை நோக்கிக் கனைக்கடல் என ஒற்றுமிக்கது. பிறவியைக் கடலாக உருவகஞ் செய்து அதனைக்கடத்தற்கு உறு துணையாகிய இறைவன் திருவடியைப் புணையாக உருவகஞ் செய்யாது விட்டமையின் இப்பாடல் ஏக தேசவுருவகம்.

காண்பார்க்கும் காணலாந் தன்மையனே கை
தொழுது
காண்பார்க்குங் காணலாங் காதலாற்— காண்பார்க்குச்
சோதியாய்ச் சிந்தையுளே தோன்றுமே தொல்லுலகுக்
காதியாய் நின்ற வரன். (17)

இ—ள். தொன்மை மிக்க உலகத்திற்குக் காரணனாகி என்றும் நிலைபெற்றுள்ள அரசனாகிய இறைவன், தன்னைக் கட்புலனாகக் காணவேண்டுமென விரும்பு வார்க்கும் அவர்தம் கண்களாற் காணத்தகும்

எளிமைத் தன்மையுடையவனே. அப்பெருமானைக் கையாரத்தொழுது வணங்கி (அவனருளே கண்ணுகக் கொண்டு) காணவல்ல மெய்யடியார் எல்லார்க்கும் அவனைக் கண்ணுரக் கண்டு மகிழ்தல் இயல்வதே யாம். (அப்பெரியோன்) இடையருத பேரன்பினுல் தன்னை வழிபடுவார்க்கு அவர்தம் சிந்தையுள்ளே தோன்றி நின்றருள்புரிவான். எ–று

காண்பார்க்கும் என்புழி, மனத்தால் நினைத்தலும் வாக்கால் வழுத்தலுமே யன்றிக் கண்ணென்னும் பொறியினுல் காண முயல்வார்க்கும் என்பது பொருளாதலின் உம்மை இறந்ததழீ இய எச்சவும்மை. கைதொழுது காண்பார்க்கும் – கையினுல் தொழுது காணவல்லார் எல்லார்க்கும்; காண்பா ரெவர்க்கும் என்ற தொடர் காண்பார்க்கும் எனக் குறைந்து நின்றதாகக்கொள்க. சோதியாய்த் தோன்றுதல், ''ஏதுக்களாலும் எடுத்தமொழியாலு மிக்குச்சோதிக்க வேண்டா சுடர் விட்டுளன் எங்கள் சோதி'' எனவரும் திருப்பாசுரத்தால் விரித்துரைக்கப் பெற்றமையறியக. உலகுக்கு ஆதியாய் நிற்றல் - உலகத்தை ஒடுக்கி மீளத் தோற்றுவித்தற்குரிய நிமித்த காரணன் தானொருவனேயாய் நிற்றல். அரன் - சங்கரித்தலாகிய தொழிலைச் செய்பவன். 'உலகுக்கு ஆதியாய் நின்ற அரன்' எனவே, சங்காரகாரணனுய் நின்ற சிவபெருமானே எல்லாவுலகத்தையும் தோற்றி நிலைபெறுத்து ஒடுக்க வல்ல முழுமுதற்கடவுள் என அறிவுறுத்தருளினுராயிற்று,

இனி, இப்பாடலில் 'காண்பார்க்கு' எனவரும் மூன்றினையும் முறையே, குரு, இலிங்கம், சங்கமம் என்ற மூன்றிடத்தும் எனக்கொண்டு, ''குருவையே

சிவமாகக் காண்பார்க்கும், இலிங்கத்தைக் கைதொழுது சிவமாகக் காண்பார்க்கும் உலகிற்கு முதற்கடவுளாய் நின்ற அரனை அங்கங்கே காணலாகும். பத்தரது சிவவேடத்தைக் காதலாற் சிவனெனவே காண்பார்க்கு அவ்விறைவன் அவர் தம் சிந்தையுள்ளே சோதியாய்த் தோன்றி யருள்வன்" எனப்பொருள் கொள்வர் சிவக் கவிமணியவர்கள்.

அரனென்கோ நான்முக னென்கோ வரிய
பரனென்கோ பண்புணர மாட்டேன்—முரணழியத்
தானவனைப் பாதத் தனி விரலாற் செற்றானை
யானவனை யெம்மானை யின்று. (18)

இ-ள்: அரக்கனாகிய இராவணனை மாறுபா டொழியத் தனது திருப்பாதத்தொரு விரலால் அடர்த் தடக்கியவனும் யானேதான் என்னும்படி என்னோடு உடனாய் நிற்பவனும் எமது தலைவனாக விளங்குபவனும் ஆகிய இறைவனை (எல்லா வுலகங்களையும் அழித்து ஒடுக்குந் தொழிலுடைய திருமேனி கொண்ட நிலை கருதி) அரன் என்ற பெயராற் கூறிப் போற்றுவேனோ? (அங்ஙனம் ஒடுங்கிய உலகங்களை மீளவும் படைக்கும் நினைவுடன் தாமரை மலரில் வீற்றிருக்குந் திருவுரு வுடைமை கருதி) நான்முகன் என்ற பெயராற் போற்று வேனோ? (இங்ஙனம் உலகங்களைக் குறித்தகால எல்லை வரை நிலைபெறச் செய்து காக்குந் தொழில் பூண்டு அலைகடல் நடுவிலே அறிதுயிலமர் திருவுருவுடைமை கருதி) அரியென்னும் பெயருடைய பரனென்று போற்று வேனோ எ-று.

என்றது, படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழில்களையும் அவ்வத்தொழிற்குரிய அயன்,

அரி, அரன் என்னும் மூவருருவில் நின்று ஒருங்கு இயற்றவல்ல இறைமைப் பண்புடையான் ஒருவனே யாதலின் பெருமானுகிய அவனை மூவர்க்கும் முதல்வனெனக் கூறுதலே தக்கது என உய்த்துணரவைத்தவாறும். சிவபெருமான் முத்தொழில் கருதி அரன், அயன், அரி என்னும் மூவருருவாக விளங்குந் திறத்தினை, 'பமைலி தொழிலது நினைவொடு பதும நன் மலரது மருவிய சிவன்' எனவும், 'உலகுகள் நிலைபெறு வகை நினைவொடுமிகும் அலைகடல் நடு வறிதுயிலமர் அரியுருவியல்பரன்' எனவும் 'முழுவதும் அழிவகை நினைவொடு முதலுருவியல் பரன்' எனவும் வரும் ஆளுடைய பிள்ளையார் அருளுரைகளால் நன்குணரலாம். அரியபரன்—அரியாகிய அழகிய மேலோன். முற்கூறிய நான்முகனுக்கும் அரியபரன் எனப் பொருள் கூறுவாருமுளர்.

'தனி விரலாற் செற்றுனை' எனவே படர்க்கை நிலையும், 'யானவனை' எனவே தன்மைநிலையும், 'எம்மானை' எனவே தமக்குப் பதியாய் முன்னின்று ஆண்ட தகவும் ஒருங்குணர்த்தப்பட்டன. யானவனை-எனது உயிர்க்குயிராய் யானுகி நின்றவனை. 'நானுய பரனை' என்பர் நம்பியாரூரர்.

இன்று நமக்கெளிதே மாலுக்கு நான்முகற்கும்
அன்றும் அளப்பரிய ஞானனை—என்றுமோர்
மூவா மதியானை மூவே ழுலகங்கள்
ஆவானைக் காணும் அறிவு. (19)

19. இ—ள்: (முன்னிலையில் வெளிப்படுத் தோன்றிய) அந்நாளிலும் திருமாலும் நான்முகனுமாகிய அவ்விருவரும் ஒருங்கு கூடித் தேடியளத்தற்

கரியனாய் நின்றவனும், எக்காலத்தும் முதிராத இளம் பிறையையணிந்தவனும்,மேல், கீழ்,நடு என்னும் மூன்று நிலைகளிலும் எவ்வேழாக அடுக்கியமைந்த எல்லாவுலகங்களுமாய் நீக்கமறக் கலந்து விளங்குபவனும் ஆகிய இறைவனைக் கண்டு தெளியும் அறிவு. (அத் தேவர் இருவர்க்கும் அக்காலத்து அரிதாயினும், அவனது திருவருளைப் பெற்ற) இன்று நம்மைப் போன்ற அடியார்களுக்கு மிகவும் எளிதாயிற்று. எ-று.

இன்று-அவனது திருவருள் கிடைக்கப்பெற்ற இன்று, இம் முத்திக்காலத்து என்பது பொருள்; 'யானே யுலகென்பன் இன்று' (சிவஞானபோதம்-உதாரண வெண்பா) என்புழிப்போல. அன்றும் என்புழி உம்மை அளத்தற்குரிய சந்தர்ப்பம் கிடைத்த அப்பொழுதும் எனக் காலத்தின் அருமையைச் சிறப்பித்து நிற்றலின் சிறப்பும்மை. காணும் அறிவு நமக்கு இன்று எளிதே என இயைத்துரைக்க.

அறிவானுந் தானே அறிவிப்பான் தானே
அறிவா யறிகின்றான் தானே — அறிகின்ற
மெய்ப்பொருளுந் தானே விரிசுடர்பார் ஆகாசம்
அப்பொருளுந் தானே யவன். (20)

இ-ள்: அறியும் இயல்புடைய ஆன்மாவேயாய் ஒற்றித்து நிற்பவனும் அவனே. (கண்ணும் அதற்கு விளக்கத்தரும் ஞாயிறும் போலப் பொருட்டன்மையால் வேறு நின்று) உயிர்கட்குப் பொருள்களின் இயல்பினை அறிவித்து நிற்பவனும் அவனே. (கண்ணினது ஒளியும் அதனோடு உடன் நின்று காணும் உயிரின் அறிவும் போல) உயிரின் அறிவினுள்ளே அத்துவிதமாகக் கலந்து உடனிருந்து

காட்டிக் காண்பவனும் அவனே. (எல்லாவற்றிற்கும் ஆதாரமாக) அறியப்படுகின்ற மெய்ப்பொருளும் அவனே. விரிந்தொளிதரும் சுடர்களாகிய ஞாயிறு திங்களாகவும் நிலமுதல் ஆகாயம் வரையுள்ள ஐம் பெரும் பூதங்களாகவும் உள்ள அவ்வெல்லாப் பொருள் களுமாய் விரவி நிற்பவனும் அவ்விறைவனே. எ-று.

"அத்துவிதமாவது, பேதப் பொருள் இரண்டும் தம் முள் அபேதமாதற்குரிய சம்பந்த விசேடம்......உயிர் ஒன்றனையறிதல் முதல்வன் உடனின்றறிதலையின்றி அறிவித்தல் மாத்திரையான் அமையாதென்பது 'தொண்டனேன் நினையுமா நினையே' 'விரும்புமா விரும்பே'......என்றிவ்வாறு முத்தி நிலைபற்றியோதிய திருவாக்குக்களானும் அறிக. இவ்வியல்பு நோக்கி யன்றே 'அறிவானுந்தானே அறிவிப்பான்தானே' என்றோதிய அம்மை, 'அறிவாயறிகின்றான்தானே' எனவும் ஓதியதூஉம் என்க. முன் 'அறிதல்' அறிவித் திற்பொருட்டெனவும், பின் 'அறிவாயறிதல்' விடயத் தில் அழுந்துவித்தற்பொருட்டெனவும் கொள்க. (சிவ ஞான போதச் சிற்றுரை-11ம் சூத்திரம்) எனச் சிவ ஞான முனிவர் இத் திருப் பாடலுக்குக் கூறிய விளக்கம் ஆழ்ந்துணரத்தக்கதாகும்.

அவனே யிருசுடர்தீ யாகாச மாவான்
அவனே புவிபுனல்காற் றுவான் - அவனே
இயமானனாய் அட்ட மூர்த்தியுமாய் ஞான
மயனாகி நின்றானும் வந்து. (21)

இ-ள். (முன்னைத் திருப்பாடலிற்கூறிய இயல் பினனாகிய) அவ்விறைவனே ஞாயிறு திங்கள் என்னும் இரு சுடர்களாகவும் தீயாகவும் ஆகாயமாகவும்

விளங்குபவன். அவனே நிலம், நீர், காற்று என்னும் இவையாகவும் நிற்பவன். ஆன்மாவாகியும் (இருசுடர் முதல் உயிர் ஈருக இங்ஙனம் எண்ணப்பட்ட) எண் வகைப் பொருள்களையும், திருமேனிகளாகக்கொண்டும் ஞானமே திரு மேனியாகத் திகழ்பவனுகி (அன்பர்க்கு) எளிவந்து அருள்செய்து நிற்பவனும் அவ்விறைவனே எ-று.

இயமானன்—ஆன்மா. ஞானமயனுகிய தனது உண்மைத் திருமேனியே யன்றி இருசுடர் முதலாக வுள்ள இவற்றையும் திருமேனிகளாக வுடையான் என்பது கருத்த கலின் 'அட்டமூர்த்தியுமாய்' என்புழி உம்மை எச்சப்பொருளாதாய் நின்றது. ஞானமயனுகி வந்து நின்ருனும் அவனே என இயைத்துரைக்க. இதன்கண் இருசுடர் முதலிய எட்டும்சொல்லி, மேலும் அட்டமூர்த்தியுமாய் என்றது, அவ்வெட்டினையும் இயக்கும் மூர்த்திகள் எட்டாதல் பற்றியென்றும், இயமானனுய் அட்டமூர்த்தியுமாய் என்றதனுல் இவ் வெட்டினும் அதிட்டித்து (இயக்கி) நிற்றலேயன்றி அவ்வெட்டினும் வியாபித்து (விரவி) நிற்கும் முறைமை யினும் கூறியாவாறென்றும், இவ்வெட்டும் சகளம் - ஞானமயன் என்றது நிட்களம் என்றும் விளக்கங் கூறுவர் பெரியோர்.

வந்திதனைக் கொள்வதே யொக்குமிவ் வாளரவின்
சிந்தை யதுதெரிந்து காண்மினோ — வந்தோர்
இராவினை நீ ரிருண்டவனைய கண்டத்தீர் எங்கள்
பிரானீருஞ் சென்னிப் பிறை. (22)

இ-ள். இரவுப்பொழுதானது ஒரு வடிவு கொண்டு வந்து நீரின் தன்மை யுடையதாய் இருண்டு

விளங்கினலொத்த திருமிடற்றை யுடையீர், எங்கள் பெருமானாக விளங்குபவரே, இந்த ஒளிபொருந்திய பாம்பின் எண்ணமானது, நுமது சடைமுடியில் அணியப்பெற்ற பிறைச்சந்திரனாகிய இதனை யணுகி வந்து பற்றிக் கொள்வதேபோல் தோன்றுகின்றது. (பாம்பினால் வரும்) அத்தீங்கினை முன்னரே கண்டறிந்து பரிகரிப்பீராக. எ-று

ஓர் இரா வந்து நீருடன் இருண்டனையகண்டத்தீர் என்க. இனி, நீர் என்ற சொல் ஆகுபெயராய் மேகத்தையுணர்த்தியதெனக்கொண்டு, 'மேகமானது இராப்பொழுதை யொத்து இருண்டு தோன்றினா லொத்த கண்டத்தையுடையீர்' எனப்பொருள் கூறு தலுண்டு. இவ்வாளரவின் சிந்தை, உம் சென்னிப் பிறையாகிய இதனை வந்து கொள்வதே ஒக்கும், அது தெரிந்து காண்மினோ எனக் கூட்டிப்பொருள் கொள்க.

பிறையும் புனலும் அனலரவுஞ் சூடும்
இறைவர் எமக்கிரங்கா ரேனும் – கறைமிடற்ற
எந்தையார்க் காட்பட்டேம் என்றென் றிருக்குமே
யெந்தையா வுள்ள மிது. (28)

இ-ள் பிறைச்சந்திரனையும் கங்கைப்பெரு வெள்ளத்தையும் நெருப்புண்டாக உயிர்த்துச் சீறும் பாம்பினையும்முடிமேலணிந்த இறைவர் எம்பொருட்டுச் சிறிதும் மனமிரங்காராயினும் எமது பொத்தப்படாத நெஞ்சமாகிய இது, எந்தையாராகிய அவர்க்கு ஆட் பட்டோம் என்று பெரு மகிழ்ச்சியுற்றிருக்கும். எ-று

அனல் அரவு – அனல் பட உயிர்த்துச் சீறும் பாம்பு. 'பிறையும் அனலரவும் சூடும் இறைவர்' என்றது

சந்திரனும் பாம்பும் தம்மிற்பகையா யிருக்கவும் அவற்றைப் பகைதீரச் சூடிய அருளாளர் என அறிவுறுத்தவாரும். 'பாம்பொடு திங்கட் பகைதீர்த் தாண்டாய்' என்பது திருத்தாண்டகம். பேரருளாளராகிய இறைவர் எமக்கு இரங்காதிரார் என்பார் 'இறைவர் எமக்கு இரங்காரேனும்' என்றார். நிச்சயமாக அருள்செய்வர் என்பது குறிப்பு. தையா உள்ளம் - பொத்துப்படாத உள்ளம்; ஓட்டையில்லாத உறுதியான மனம் என்பது பொருள். தைத்தல் - துளைபடுதல். இனி தயாவுள்ளம் என்பதே அகரத்திற்கு ஐகாரம் போலியாய், தையாவுள்ளம் என நின்றது என்பர் சிவக்கவிமணி.

இதுவன்றேயீசன் திருவுருவ மாமா
றிது வன்றே யென்றனக்கோர் சேமம் – இதுவன்றே
மின்னுஞ் சுடருருவாய் மீண்டாயென் சிந்தனைக்கே
யின்னுஞ் சுழல்கின்ற திங்கு. (24)

இ-ள்: மின்னுகின்ற சுடரொளிப் பிழம்பாய் நின்று (கட்புலனாகப்) புறத்தே விளங்கித்தோன்றி மீளவும் எனது சிந்தையின்கண் வந்து வீற்றிருந்தருளும் பெருமானே, ஈசனாகிய நினக்குரிய திருவுருவமாவது சுடர் விட்டு விளங்கும் இதுவேயன்றோ? (அடியேனாகிய) எனக்குரிய ஒப்பற்ற சேமநிதியாக விளங்குவது அருளுருவாகிய இதுவல்லவா? நினது திருவுருவாகிய இதுவே (எனது கட்புலனை விட்டு அகலாது) இங்கே இன்னும் சுழன்று ஒளி வீசிக் கொண்டிருக்கின்றது. எ-று.

இதுவன்றேயென வரும் மூன்றும் சொற்பொருட் பின்வருநிலையென்னும் அணியமைய நின்றன.

சேமம் - பாதுகாவல். சேமம் செய்வதனைச் சேமம் என்றார். அகப்பூசையில் இறைவனைக் கோடி ஞாயிற்றின் ஒளி திகழும் மின்னல் போலத் தியானித்துப் போற்றும் முறையுண்டென்பர் பெரியோர். அம்மையார் தம் உள்ளத்தும் புறத்தும் எஞ்ஞான்றும் கண்டு மகிழ்ந்த தெய்வக் காட்சியினையே இத்திருப் பாடலில் உலக மக்களுக்கு அறிவுறுத்தருளிய பெருங் கருணைத்திறம் அறிந்து போற்றத்தகுவதாம்.

இங்கிருந்து சொல்லுவதென் எம்பெருமான்
எண்ணாதே
எங்கும் பலிதிரியும் எத்திறமும்—பொங்கிரவில்
ஈமவனத் தாடுவதும் என்னுக்கென் றாராய்வோம்
நாமவனைக் காணலுற்ற ஞான்று. (25)

இ-ள்: எம் இறைவனாகிய சிவபெருமான் தன் பெருமையினைச் சிறிதும் எண்ணாது எவ்விடத்தும் பிச்சையேற்றுத் திரியும் எவ்வகைச் செயல்முறையும் இருள் மிகுந்த நள்ளிரவிலே சுடுகாட்டில் ஆடுவதும் எதன் பொருட்டு என்று நாம் அப்பெருமானைக் காணும் வாய்ப்பு நேர்ந்தபொழுது நேரில் வினவி ஆராய்ந்தறிவோம். (அவனைக் காணவொண்ணாத வண்ணம் பாசத்தாற் பிணிப்புற்றுக் கிடக்கும்) இந் நிலையிலிருந்து நாம் அவ்விறைவன் செய்யும் செயல்களைக் குறித்துச் சொல்லுதற்கு யாதுளது? எ-று.

இங்கு பாசத்தாற் பிணிப்புண்டு கிடக்கும் இப் பெத்தநிலையில் அவனைக் காணலுற்ற ஞான்று—அவனருளாலே அவனைக் கண்டு இன்புறும் முத்திக் காலத்து. பொங்கு இரவு—பேரூழிக் காலமாகிய

சங்கார காலம். ஈமம்-உலகம் சங்கரிக்கப்பட்ட பெரு வெளி. ஆடுதல்-மீள உலகத்தைத் தோற்றுவித்தற் பொருட்டுச் செய்யும் அருட் கூத்து.

ஞான்ற குழற்சடைகள் பொன்வரைபொன்
மின்னுவன
போன்ற கறைமிடற்றான் பொன்மார்பின்—
ஞான்றெங்கும்
மிக்கயலே தோன்ற விளங்கி மிளிருமே
அக்கயலே வைத்த அரவு. (26)

தொங்கும் இயல்பினவாகிய (உமையம்மையாரது) குழலும் (இறைவனது) சடையும் ஆகிய இவை பொன்மலை பொன்னொளியும் மின்னொளியும் பெற்றுத் திகழ்ந்தாற்போன்றனவாகி இறைவனது திருமேனியின் அயலே ஒளிமிகுந்து தோன்ற நஞ்சக் கறை பொருந்திய திருமிடற்றையுடைய அவ்விறைவனது பொன் மார்பின்கண் எவ்விடத்தும் ஞான்று தோன்றும் அக்குமாலையும் பாம்பும் (குழலும் சடையுமாகிய அவற்றையொத்து) விளங்கி மிளிரும், எ-று.

'தெளிகின்ற பொன்னும் மின்னும் அன்னதோற்றச் செழுஞ் சுடரே' என வரும் திருவாசகத் தொடர் இங்கு நினைக்கத் தகுவதாம். குழற் சடைகள்-குழலும் சடையும் ஆகிய அவை. குழல்-கூந்தல்; 'குழலார் சிறு புறத்துக் கோல்வளை' என்பர் பின்னும் (அற்புத-51). இனி, 'கடை குழன்ற சடைக் கற்றைகள்' எனப் பொருள் கொண்டு, 'பொன்வரைபோன் மின்னுவன' என்ற பாடத்திற்குப் 'பொன்னின் கீற்றினையொத்து ஒளி வீசுவன' எனப் பொருள் கூறுதலும் பொருந்தும்.

அரவமொன் றாகத்து நீநயந்து பூணேல்
பரவித் தொழுதிரந்தோம் பன்னாள் — முரணழிய
ஒன்னாதார் மூவெயிலும் ஓரம்பால் எய்தானே
பொன்னார மற்றொன்று பூண். (27)

இ-ள்: பொருந்தாதாராகிய அவுணர்களுடைய வலியழிய அவர்தம் மும்மதில்களையும் அம்பொன்றினால் எய்து எரித்தருளிய பெருமானே, நின்னைப் பலநாளும் பரவி வணங்கி அடியோம் இரந்து வேண்டுகின்றோம், எமது இறைவனாகிய நீ நின் திருமேனியில் பாம்பாகிய ஒன்றை அணிகலனாக விரும்பிப் பூணுது தவிர்க. (அதற்கு ஈடாகப்) பொன்மாலையாகிய மற்றோர் அணியினைப் பூண்டருள்வாயாக. எ-று.

'அரவமாட்டேல்' என்பது இங்கு ஒப்பு நோக்கத் தகுவதாம்.

பூணாக வொன்று புனைந்தொன்று பொங்கதளின்
நாணாக மேன்மிளிர நன்கமைத்துக் —கோணாகம்
பொன்முடி மேற் சூடுவது மெல்லாம் பொறியிலியேற்
கென்முடிவ தாக விவர். (28)

இ-ள்: இறைவராகிய இவர் கோள் இழைக்க வல்ல நாகங்களுள் ஒன்றைத் திருமார்பிற் பூணாக அணிந்ததும் ஒரு பாம்பினைப் புலித்தோலுடையின் மேல் அரைக் கச்சாக நன்கு வரிந்து கட்டியதும் மற்றொரு பாம்பினைப் பொன்முடி மேற் சூடியதும் ஆகிய இச்செயல்களெல்லாம் நற்பேறிலாதேனாகிய ஏழையேற்கு யாதாய் முடியுமோ? எ-று.

தீண்டிவருத்தும் பாம்புகளால் இறைவர்க்குத் தீங்கு நேரின் அவரையின்றியமையாத எளியேனது

நிலையாதாய் முடியும் என அம்மையார் இறைவன்பால் வைத்த எல்லையற்ற பேரன்பின் திறத்தால் இரங்கிய வாறு காண்க. பொறி-நல்வினைப் பேறு. "பொறியின்மையார்க்கும் பழியன்று" என்பது திருக்குறள்.

இவரைப் பொருளுணர மாட்டாதா ரெல்லாம்
இவரை யிகழ்வரே கண்டீர் - இவர்தமது
பூக்கோல மேனிப் பொடி பூசி யென்பணிந்த
பேய்க் கோலங் கண்டார் பிறர். (29)

29. இ-ள் (அடியார்க்கு எளிவந்தருளும் பெருமானாகிய) இவரை முழுமுதற்பொருள் என்று உணரவல்ல ஞான மிலாதா ரெல்லாம் இவரை யிகழ்ந்துரைத்தல் முறையாகுமோ? (நம்பெருமானாகிய) இவர் செந்தாமரை மலர்போன்று செந்நிற முடையதாய்த் திகழும் தமது திருமேனியிலே வெள்ளிய திருநீற்றினைப் பூசி எலும்பு மாலையை யணிந்தமையால் அஞ்சத்தகுந்த புறக்கோலத்தினையே பிறர் கண்டனர். எ-று

இறைவர் தமக்கு அணியராய்த் தோன்றிய எளிமைத்திறம் விளங்க அம்மையார் 'இவர்' என்னும் அணிமைச் சுட்டினால் மும்முறை சுட்டினர். பொருளுணர மாட்டாதார் - முழுமுதற்பொருள் இவரே யென்று உணரவல்ல அறிவுமதுகை யில்லாதார். இகழ்வதே - இகழ்தல் முறையோ? பூக்கோலமேனி - தாமரை மலர்போலும் சிவந்த அழகியதிருமேனி. பேய்க்கோலம் - கண்டார்க்கு அச்சத்தை விளைக்குந் தோற்றம். 'பிறர் பேய்க்கோலம் கண்டார்' யானோ அத்திருக்கோலத்திற்கு உள்ளீடாகிய பூக்கோலமேனியின் பொலிவினையே கண்டு அகமகிழ்கின்றேன்' என்பது கருத்து.

பிறரறிய லாகாப் பெருமையருந் தாமே
பிறரறியும் பேருணர்வுந் தாமே – பிறருடைய
என்பே யணிந்திரவிற் றீயாடு மெம்மானார்
வன்பேயுந் தாமு மகிழ்ந்து. (30)

இ–ள் அன்பரல்லாத பிறரால் அறிய வொண்ணாத பெருமையுடையவரும் அவ்விறைவரே. அவர்களிற் பிறராகி அருட் கண்ணுடையோராகிய அன்பர்கள் அறிந்து மகிழவல்ல ஞானத் திரளாய்த் திகழ்பவரும் அவரே. எம்பெருமானாகிய அம்முதல்வர் (தம்முடன் வைத்து மூவரென்றே யெண்ணி யிறந் தொழிந்த) ஏனையிருவருடைய எலும்புகளை யணிந்து வலியபேயும் தாமுமாக இரவில் தீயில் நின்று மகிழ்ந்து ஆடியருள்வர். எ–று

(முதலடியில்) பிறர் புறச்சமயத்தார். (இரண்டா மடியின் முதலில்) பிறர் - அவரொடு தொடர்பில்லாத மெய்யடியார்கள், (தனிச்சொல்வாய் வந்த) பிறர் - படைத்தலையும் காத்தலையும் மேற்கொண்டமையால் தம்மை இறைவனோடு வைத்து எண்ணிச்செருக்குற்ற ஏனை அயன் அரிஎன்னும் இருவர்.

மகிழ்தி மடநெஞ்சே மானுடரி னீயுந்
திகழ்தி பெருஞ்சேமஞ் சேர்ந்தாய் – இகழாதே
யாரென்பே யேனு மணிந்துழல்வார்க் காட்பட்ட
பேரன்பே யின்னும் பெருக்கு. (31)

மடமை பொருந்திய நெஞ்சமே, மக்கட் பிறப் பினருள் ஒருவர்க்குரிய நெஞ்சமாக விளங்குகின்றாய் ஆதலால் (எனது நெஞ்சமாகிய) நீயும் பெரிய

பாதுகாவலைப் பெற்றனையாயினை. இவ்வுயர் நிலை நினக்கு எய்தியது குறித்து மகிழ்வாயாக. எவருடைய எலும் பேயாயினும் இகழாது மாலையாக அணிந்து ஆடுவாராகிய சிவபெருமானுக்குத் தொண்டு செய்தற்குரிய பேரன்பினையே மேன்மேலும் பெருக்கிக்கொள்வாயாக. எ-று.

என்றது, அறிவு வளர்ச்சிக்குப் பாதுகாவலாகிய மக்கட்பிறவி வாய்த்த இப்பொழுதே இறைவன் பாற் செலுத்தத்தகும் உயிர்ப்பண்பாகிய அன்பினைவளர்த்து உய்தி பெறுக எனநெஞ்சிற்கு அறிவுறுத்தவாறு. நீயும் உயிராகிய யானேயன்றி எனது நெஞ்சமாகிய நீயும் என்பது கருத்தாகலின் உம்மை இறந்தது தழீயஇய எச்சவும்மை.

பெருகொளிய செஞ்சடைமேற் பிள்ளைப் பிறையின்
ஒருகதிரே போந்தொழுகிற் றெக்குந் - தெரியின்
முதற்கண்ணான் முப்புரங்கள் அன்றெரித்தான் மூவா
நுதற்கண்ணான் றன்மார்பி னூல். (32)

இ-ள் (எல்லா வுலகத்திற்கும் நிமித்த காரணனாய்) முற்பட்டு விளங்கும் முதல்வனும் முன்னொரு நாளில் முப்புரங்களையும் எரித்து அழித்தவனும் மூவா இளநலம் வாய்ந்த நெற்றிக்கண்ணனும் ஆகிய சிவபெருமானது திருமார்பில் விளங்கும் பூணநூலின் இயல்பை உற்று நோக்குவோமானால், அதன் தோற்றம், பேரொளிதிகழும் செஞ்சடைமேல் விளங்கும் இளம் பிறையாகிய ஒற்றைக்கலையானது (இளகி) வந்து மார்பில் ஒழுகியது போன்று அமைந்துள்ளது எ-று.

பிள்ளைப் பிறையாகிய ஒருகதிர் என்க. ஒருகதிர்-ஒருகலை. முதற்கண்ணோன் - (எல்லாவுலகிற்கும் காரணமாய்) முன்னே உள்ளவன். 'மூளைத்தானை யெல்லார்க்கும் முன்னே தோன்றி' என்பர் திருநாவுக்கரசர்.

நூலறிவு பேசி நுழைவிலா தார்திரிக
நீல மணிமிடற்றான் நீர்மையே—மேலுலந்த
தெக்கோலத் தெவ்வுருவா யெத்தவங்கள்
செய்வார்க்கும்
அக்கோலத் தவ்வுருவே யாம். (33)

இ-ள்: நுண்ணறிவு வாய்க்கப்பெறுதார் வெறும் நூற்புலமையினையே கருவியாகக்கொண்டு தமக்குத் தோன்றியவாறே பேசித்திரிவாராக. நீலமணிபோலும் நிறமும் ஒளியும் வாய்ந்த கண்டத்தினையுடைய சிவபெருமானது பெருமையே தனக்கு மேலாவதொதுவுமின்றி உயர்ந்ததாகும். (அஃது எவ்வாறெனின்) யார் யார் எந்தக்கோலத்தில் எவ்வகைத் திருவுருவங்களை நினைந்து எத்தகைய தவச்செயல்களை மேற்கொண்டு வழிபடுவாராயினும் அவரவர் கருதிய திருவுருவில் வெளிப்பட்டருள்வோன் அவன் ஒருவனேயாதலின். எ-று.

நுழைவு-நுட்பம்; நுண்ணறிவு. நுழைவு இலாதார் நூலறிவு பேசித் திரிக எனவே, மெய்ப் பொருளையுணர்ந்து மகிழ்தற்குச் சிறிதும் பயன்படாத அன்னோர் கூறும் வெற்றுரைகள் பொருளாக மதிக்கத்தக்கன அல்ல என அறிவுறுத்தவாறு. நீர்மை-புகழ்த் திறமாகிய பெருமை. மேல் உலந்தது-தனக்கு மேலாவது ஒன்றுளதாம் நிலைமை கெட்டது; உயர்வறவுயர்ந்தது என்பது பொருள். அன்பால் நினைந்து வழிபடும் அடியார்களுக்கு அவரவர் நினைந்த திருமேனிகொண்டு

வெளிப்பட்டுத் தோன்றி யருள்புரிபவன் இறைவன் ஒருவனேயாதலின் அவனது திருவருட் பெருமையே ஏனையெல்லார் பெருமைகளிலும் உயர்வறவுயர்ந்தது என்பது கருத்து. 'ஆரொருவர் உள்குவா ருள்ளத் துள்ளே அவ்வுருவாய் நிற்கின்ற அருளுந் தோன்றும்' எனத் திருநாவுக்கரசரும் 'எவ்வுருவில் யாரொருவர் உள்குவாருள்ளத்துள், அவ்வுருவாய்த் தோன்றியருள் கொடுப்பான்' எனச் சேரமான் பெருமாளும் இத்திருப் பாடற்கருத்தினை இனிது விளக்குதல் காண்க.

ஆமா றறியாவே வல்வினைகள் அந்தரத்தே
நாமாளென் றேத்தார் நகர்மூன்றும்—வேமா
றொருகணையாற் செற்றானை யுள்ளத்தா லுள்ளி
அருகணையா தாரை யடும். (34)

இ-ள்: வலிய தீவினைகள், (செய்தோரைத் தொடர்ந்து சென்று) அவர்க்காம் முறைமையினை யறியாத சடப் பொருளே யாயினும், 'நாம் அரன் அடிமை' என்னுந் துணிபுடன் இறைவனையேத்தி வழிபடாத அவுணர்கள் தமக்குப் பாதுகாவல் செய்யும் அரண்களாக வானிடத்தே அமைத்துக்கொண்ட முப்புரங் களும் ஓரம்பினால் வெந்து சாம்பராகும்படியழித்த சிவ பெருமானை நெஞ்சார நினைந்து அவனருளைச் சார்ந் தொழுகாதாரைத் தாமே அணுகிச் சுடுவனவாம். எ—று.

வல்வினைகள் ஆம் ஆறு அறியாவே (எனினும்), ஒரு கணையாற் செற்றானை உள்ளத்தால் உள்ளி அருகு அணையாதாரை, அடும் என முடிக்க. இனி, 'ஆமா றறியாமே' என்பது பாடமாயின், 'அருகணையாதா ராகிய அன்னோர், தாம் ஆமாறு மற்றொன்று கூறினும்

அவர்கள் அறியாவண்ணம் வல்வினைகள்தாம் முந்துற்று அடும்' எனப் பொருளுரைக்க.

அடுங்கண்டாய் வெண்மதியென் றஞ்சி யிருள்போந்
திடங்கொண் டிருக்கின்ற தொக்கும் — படங்கொள்
அணிமிடற்ற பேழ்வாய் அரவசைத்தான் கோல
மணிமிடற்றி லுள்ள மறு. (35)

இ-ள்: படத்தினைக் கொண்ட அழகியமிடற்றினையும் பிளந்த வாயினையும் உடைய பாம்பினை அரைக்கச்சையாகக் கட்டிய இறைவனது நீலமணி போலும் நிறம் வாய்ந்த கண்டத்திற் பொருந்திய நஞ்சக் கறையின் தோற்றம், வெண்மை நிறம் வாய்ந்த சந்திரன் தனது நிலவொளியினால் தன்னைக் கொல்லும் என்று இருளானது அஞ்சிப் போந்து கண்டத்தினைப் புகலிடமாகக் கொண்டு தங்கியதனை ஒக்கும். எ-று.

மணிமிடற்றிலுள்ள மறு, இருள், வெண்மதி அடுமென்று அஞ்சிப் போந்து இடங்கொண்டிருக்கின்றதை ஒக்கும் என முடிக்க. இது தற்குறிப்பேற்ற உவமை. கண்டாய்-அசை.

மறுவுடைய கண்டத்தீர் வார்சடைமேல் நாகந்
தெறுமென்று தேய்ந்துழலும் ஆவா — உறுவான்
தளரமீ தோடுமேல் தானதனை யஞ்சி
வளருமோ பிள்ளை மதி. (36)

இ-ள்: (எல்லையற்ற பேரருளுக்கு அடையாளமாகத் திகழும்) நஞ்சக்கறை வாய்ந்த திருமிடற்றை

நெறியாகிய வீடுபேற்றினைப் பெற்று இன்புறுவர் என்பது கருத்து.

ஈண்டொளிசேர் வானத் தெழுமதியை வாளரவந்
தீண்டச் சிறுகியதே போலாதே — பூண்டதோர்
தாரேறு பாம்புடையான் மார்பிற் றழைந்திலங்கு
கூரேறு காரேனக் கொம்பு. (38)

இ-ள் பூணப்பெற்றதொரு மாலையாக வளைந்து ஊரும் பாம்பினையணிந்த இறைவனது திருமார்பின் கண்ணே பொருந்திவிளங்கும் கரியநிறம் வாய்ந்த பன்றியினது கூரிய கொம்பானது, (ஞாயிற்றின்) ஒளிக்கற்றைகள் அனைத்தும் திரண்டு சேர்ந்த செவ்வானத்திலே தோன்றிய வெண்மதியைக் கொடிய பாம்பு தீண்டுதலால் (அம்மதி) தேய்ந்து சிறுகியதனை ஒத்துத் தோன்றுமல்லவா? எ-று.

போலாதே - போலும். ஏகாரம் எதிர்மறை. கார் ஏனக் கூர்எறுகொம்பு என இயைக்க; கார்ஏனம் - கரிய திருமாலாகிய வராகம். வராகமூர்த்தியின் கொம்பினைப்பறித்து இறைவன் அணிந்துகொண்டான் எனப் புராணங்கூறும். செவ்வொளிபரவிய வானம் சிவபெருமானது திருமார்புக்கும், அவ்வானத்தில் சிறுகித்தோன்றும் பிறைமதி இறைவனது சிவந்த திருமார்பிலே திகழும் பன்றிக்கொம்பிற்கும் உவமையாயவாறு காண்க. ஈண்டுதல் - திரண்டு தன்கண்ணே வந்து சேர்தல்.

கொம்பினையோர் பாகத்துக் கொண்ட குழகன்றன்
அம்பவள மேனி யது முன்னஞ் — செம்பொன்
அணிவரையே போலும் பொடியணிந்தால் வெள்ளி
மணிவரையே போலும் மறித்து. (39)

இ-ள் : பூங்கொம்பு போல்வாராகிய உமையம்மையாரை ஒரு பாகத்திற் கொண்ட அழகனுகிய இறைவனது பவளம் போலும் செந்நிறம் வாய்ந்த திரு மேனியானது, (தனது இயல்பாகிய) முன்னைய நிலையில் செம்பொன்மலைபோன்று பேரொளியுடையதாய்த் திகழும். அத்திரு மேனியின்மேல் வெண்ணீறு பூசப்பெற்ருல் அதுவே மீட்டும் அழகிய வெள்ளிய மலையினைப் போன்று விளங்கும். எ-று.

கொம்பு - பூங்கொம்பு போல்வாராகிய உமாதேவியார்; உவம ஆகுபெயர். பவளமேனி என்றது, நிறம்பற்றிய உவமை; செம்பொன் அணிவரையே போலும் என்றது, நிறத்துடன் ஒளியுடைமையும் ஒருங்கு கருதியதாதலின் உவமைக்குவமை யன்றெனவுணர்க. மறித்து – மீண்டும்,

மறித்து மடநெஞ்சே வாயாலு சொல்லிக்
குறித்துத் தொழுதொண்டர் பாதம் — குறித்தொருவர்
கொள்ளாத திங்கட் குறுங்கண்ணி கொண்டார்மாட்
டுள்ளாதார் கூட்டம் ஒருவு. (40)

இ-ள் : இளமை பொருந்திய நெஞ்சமே, (உலகப் பொருளிற் செல்லும் அவாவை) மீட்டு, இறைவனுக்குத் தொண்டு பூண்ட மெய்யடியார்களின் திருவடிகளைக் குறிக்கொண்டு தியானித்து வாயினுலும் போற்றி வணங்கி வழிபடுவாயாக. ஒருவராலும் விரும்பி மேற்கொள்ள முடியாத நிலையில் தானே தனது இச்சையால் கொண்ட திருவருளின் விளைவாகிய திருமேனியிலே திங்களை முடிமாலையாக

அணிந்தருளிய இறைவர்பால் அன்பு வைத்துத் தியானித்துப் போற்றுதாராகிய தீயோர் கூட்டத்தை விட்டு விலகி உய்வாயாக. எ-று.

குறித்தொருவர் கொள்ளாத கொண்டார் எனவும் திங்கட் குறுங்கண்ணி கொண்டார் எனவும் தனித் தனி இயையும். குறித்தொருவர் கொள்ளாத என்றது, பிறரெவரும் குறிக்கொண்டு முயன்று தமது ஆற்றலாற் படைத்துக் கொள்ளமுடியாத என்ற பொருளுடையதாய் இறைவன் கொண்டருளும் அருளுருவின் இயல்பினைப் புலப்படுத்தியவாறுணர்க. உள்ளாதார் - அன்பினால் நினையாததீயோர். ஒருவு - நீங்குவாயாக. இறைவனது அருள்வழி நின்ற சீவன் முத்தர்களாகிய அடியார்களைச் சிவனெனவே தெளிந்து முக்கரணங்களாலும் வழிபடுக என்பார், 'தொண்டர் பாதம் குறித்து வாயாலும் சொல்லித் தொழு' என்றார். சிவபத்தரல்லாதாராகிய பிறர் இறைவனது திருவருளை மறக்கும்படி செய்து தீயவழிகளிற் கொண்டுசென்று மலங்களாகிய பிறவித்துயருள் வீழ்த்துவராதலின் மீளாத் துன்பத்திற்குக் காரணமாகிய அத்தகைய தீயோரது தொடர்பினை அறவே விலகி ஒழுகுக என வற்புறுத்துவார், 'திங்கட் குறுங்கண்ணி கொண்டார் மாட்டு உள்ளாதார் கூட்டம் ஒருவு' என அறிவுறுத்தியருளினார். குறுங்கண்ணி — முடியில் அணியத்தக்கதாகிய சிறியமாலை.

ஒருபா லுலகளந்த மாலவனா மற்றை
யொருபா லுமையவளா மென்றால்—இருபாலும்
நின்னுருவ மாக நிறந்தெரிய மாட்டோமால்
நின்னுருவோ மின்னுருவோ நேர்ந்து. (41)

இ.ள்: இறைவ, நின் திருமேனியின் ஒரு பகுதியாகிய வலப்பாகத்தில் மூவுலகம் ஈரடியால் அளந்த காத்தற் கடவுளாகிய திருமால் உள்ளார். மற்றொரு பகுதியாகிய இடப்பாகத்தில் (நின்னிற்பிரிவற விளங்கும்) உமையம்மையார் உள்ளார் இங்ஙனமென்றால் இருபக்கத்திலும் நினது திருமேனியின் செம்மை நிறத்தினை முற்றுந்தெரிந்துகொள்ள இயலாதவர்களானோம். நின்னைப் பொருந்தி (மறைத்தது) திருமாலுருவோ அன்றி உமையம்மையார் உருவோ (இதனை எமக்கு விளங்கக்கூறுவாயாக) எ-று

மாலொரு பாலும் மாதொரு பாலும் பொருந்தி விளங்கும் இறைவனது திருக்கோலத்தினை வியந்துரைத்தவாறு. 'மாதொரு பாலும் மாலொரு பாலும் மகிழ்கின்ற நாதர்' (1-97-2) என்பது ஆளுடைய பிள்ளையார் தேவாரம்.

நேர்ந்தரவங் கொள்ளச் சிறுகிற்றோ நீயதனை
யீர்ந்தளவே கொண்டிசைய வைத்தாயோ—பேர்ந்து
வளங்குழவித் தாய்வளர மாட்டாதோ வென்னோ
இளங்குழவித் திங்க ளிது. (42)

இ-ள்: இளமை வாய்ந்த பிள்ளைப் பிறையாக விளங்கும் இம்மதிதான், தன்னைப்பாம்பு தீண்டி விழுங்கியதனாற் சிறுகியதோ? அன்றி இறைவனாகிய நீயே அம்மதியை அளவுபெறப்பிளந்து (நினது திருமுடிக்குப்) பொருந்த அணிந்து கொண்டனையோ? அன்றி இப்பிறைதான் வளமுடைய பிள்ளையாக மீண்டும் வளர்தற்குரிய ஆற்றலையிழந்து போயிற்றோ? இப்பிறை வளர்ச்சியின்றி இந்த நிலையில் இருப்பதற்குரிய காரணம் யாதோ? எ-று.

அளவே ஈர்ந்து எனமாறுக. இறைவனது சடை மீது விளங்கும் பிறைமதி வளர்ச்சியின்றி யிருத்தற் குரிய காரணங்களை தற்குறிப்பேற்ற அணியமைய அம்மையார் கற்பித்துரைத்த நயம் அறிந்து மகிழ்தற் குரியதாகும்.

திங்க ளிதுசூடிச் சில்பலிக்கென் றூர்திரியேல்
எங்கள் பெருமானே யென்றிரந்து—பொங்கொளிய
வானோர் விலக்காரேல் யாம் விலக்க வல்லமே
தானே யறிவான் றனக்கு. (43)

இ—ள்: 'எங்கள் பெருமானே, ஒளிதிகழ் இளம் பிறையாகிய இதனைச் சென்னியிற் சூடிக்கொண்டு இழிந்த பிச்சை யுணவை யேற்றற் பொருட்டு ஊர் தோறும் திரியாதே' என இறைவனை இரந்து வேண்டிப் புகழ்மிக்க வானோர்கள் விலக்க முன்வராது போவ ராயின், உணர்த்துவார் பிறரை யின்றித் தானே எல்லாவற்றையும் உணரவல்ல முற்றறிவினனாகிய அப்பெருமானுக்கு(இதனை யறிவித்து) விலக்கும் ஆற்ற லுடையோம் (சில்வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவின ராகிய) யாமோ? எ—று,

தேய்ந்து சிறுகும் திங்களைச் சடையிற்சூடி ஒளி தந்த பெரியோனாகிய நீ, ஒளிமாழ்குஞ் செய்வினை யாகிய பிச்சைத் தொழிலை மேற்கொள்ளலாகாதென விலக்கு வார், 'திங்களிது சூடிச் சில்பலிக்கென் றூர்திரியேல்' என்றார். பொங்கு ஒளி-தாம் உளராம் காலத்து மிக்குத் தோன்றுதலாகிய புகழ். ஒளிய—ஒளியினையுடைய; பெயரெச்சக் குறிப்பு. இறைவனுக்குப் பிறர் சொல்லத் தக்க அறிவுரை எதுவுமில்லை யென்பார் 'தானேயறி வான் தனக்கு' என்றும், தவ வலிமையும் ஞானமும்

ஆகிய ஒளியுடையராய் இறைவன்பால் அன்புடைய வானோர்களே அவன் செய்யும் பிச்சை யேற்றல் முதலிய தொழில்களை விலக்க முன் வந்திலராயின், அத்தொழிலின் நோக்கத்தைச் சிற்றறிவினராய யாமோ உணர்த்த வல்லோம் என்பார், 'பொங்கொளிய வானோர் விலக்காரேல் யாம் விலக்க வல்லமோ' என்றும் கூறினார். இதனால், திங்கள் சூடுதல், பிச்சை யேற்றல் முதலாக இறைவன் செய்தருளும் தொழில் களின் நிறைகுறைகளைக் கண்டறிதல் சிற்றறிவுடைய மக்களாகிய நம்மனோர்க்கு ஒவ்வாததாம் என அம்மையார் குறிப்பால் அறிவுறுத்தருளினா ராயிற்று. 'அடிகள் செய்வன ஆர்க்கறிவொண்ணுமே' எனவரும் ஆளுடைய பிள்ளையார் அருளிச் செயல் இங்கு நினைக் கத் தகுவதாகும்.

தனக்கே யடியனாய்த் தன்னடைந்து வாழும்
எனக்கே யருளாவா றென்கொல்— மனக்கினிய
சீராளன் கங்கை மணவாளன் செம்மேனிப்
பேராளன் வானோர் பிரான். (44)

இ-ள்: உள்ளத்திற்கு இனிமைதரும் மிக்க புகழை யுடையவனும் கங்கையை மணந்த நாயகனும் சிவந்த திருமேனியை யுடைமையால் சிவன் என்னுந் திருப் பெயரைத் தனக்கே யுரியதாகக் கொண்டவனும் (தொழப்படும்) தேவர்களாலுந் தொழுது போற்றப் பெறும் தனிமுதல்வனும் ஆகிய இறைவன், (பிறரெவ ரையும் கருதாது) தனக்கே யடிமைத் தொண்டு பூண்டேனாகித் தன் திருவடிகளைப் பற்றுக் கோடாக அடைந்து வாழும் எளியேனுக்கு எளிவந்து அருளாமைக்குரிய காரணமாக என்பாலுள்ள குற்றம் யாதோ? எ-று.

'உன்ன உன்ன உவகை தருவான்' ஆதலின் 'மனக்கினிய சீராளன்' என்றார். மனக்கு இனிய-மனத்துக்கு இனிய; அத்துச்சாரியை யின்றி வந்தது. இறைவன் மனக்கினிய சீராளன் ஆதலால் அருளாமைக் குரிய வன்கண்மையாகிய குற்றம் அவன்பால் இல்லையென்றும் அவனருளைப் பெறுதற்கு ஏற்ற தகுதி முற்றும் என்பால் அமைந்திலது எனக் கருதுதலே ஏற்புடையதென்றும் குறிப்பால் அறிவுறுத்துவார், 'மனக்கினிய சீராளன்...பிரான் எனக்கே அருளாவாறு என்கொல்' என்றார். அருளாவாறு—அருளாமைக்குரிய காரணம்.

"துஞ்சும்போதும் துற்றும்போதுஞ்
சொல்லுவ னுன் திறமே
தஞ்சமில்லாத் தேவர்வந்துன்
தாளிணைக் கீழ்ப் பணிய
நஞ்சையுண்டாய்க் கென்செய்கேனோ
நாளும் நினைந்தடியேன்
வஞ்சமுண்டென் றஞ்சுகின்றேன் வலிவல
மேயவனே"

என ஆளுடைய பிள்ளையாரும்,

'உன்னு லொன்றுங் குறைவில்லை உடையா யடிமைக்
காரென்பேன்'

என ஆளுடைய அடிகளும் அருளிய திருப்பாடல்கள் இங்குச் சிந்திக்கத்தக்கன.

பிரானவனை நோக்கும் பெருநெறியே பேணிப்
பிரானவன்றன் பேரருளே வேண்டிப் பிரானவனை
எங்குற்று னென்பீர்கள் என்போல்வார் சிந்தையினும்
இங்குற்றான் காண்பார்க் கெளிது. (45)

இ-ள்: எத்திறத்தார்க்கும் தலைவனாகத் திகழும் இறைவனொருவனையே உள்ளத்தால் கருதி நோக்கும் பெருநெறியாகிய சிவநெறியினை விரும்பி நின்று (அந் நெறியில் தடையின்றியொழுகுதற்கு உறுதுணையாக) அப்பெருமானது பெருமைவாய்ந்த திருவருளையே வேண்டி, தலைவனாகிய அப்பெருமானை எவ்விடத்து எழுந்தருளியுள்ளான் என்று வினவித் தேடும் உலக மக்களே இங்கு என்னைப் போன்றாரது இழிந்த சிந்தையினும் அப்பெருமான் எழுந்தருளியுள்ளான். தெளிவுடைய உள்ளத்தினராய்க் காண முயல்வார்க்கு அவனைக் கண்டு மகிழ்தல் மிகவும் எளிதே எ-று.

இதன்கண் முதலடியில் நின்ற 'பிரான்' என்ற சொல், எல்லா நெறிகளும் தன்பால் வந்து சாரத் தான் எத்திறத்தார்க்கும் அருள் புரியவல்ல தனி முதல்வனாகத் திகழ்வோன் என்ற இயைபினை விளக்கி நின்றது. 'எத்திறத்தோர்க்கும் இலக்காய் நின்ற எம்பெருமான்' எனப்போற்றுவர் ஆளுடைய பிள்ளையார். இனி, இரண்டாம் அடியின் முதற்கண் நின்ற 'பிரான்' என்ற சொல் பேரருளுக்கு நிலைக்களமாக விளங்குபவன் அவனொருவனே என அவன்பாலுள்ள பேரருளுடைமையாகிய இறைமைக் குணத்தினைச் சிறப்பித்து நின்றது. தனிச்சொல்லாய் நின்ற 'பிரான்' என்பது, உயிர்க்குயிராதலால் எம்பிரான் ஆயினான் என அம்முதல்வன் உயிர்தோறும் பிரிவற நிறைந்து நிற்றலைச் சுட்டியது. இங்ஙனம் பிரான் என்ற சொல் மூன்றிடங்களிலும் வெவ்வேறு பொருட் குறிப்பினைத் தந்து நிற்றலின் கூறியது கூறலன்மையுணர்க. நோக்குதல்-அவனருளே கண்ணாகக் கொண்டு மனத்தால் நோக்கியுணர்தல். இது 'நோக்கல் நோக்கம்' எனப்படும்

'என்போல்வார் சிந்தையினும்' என்புழி உம்மை, தமது தாழ்வுணர நின்றமையின் இழிவு சிறப்பு; 'சிறைவான் புனற்றில்லைச் சிற்றம்பலத்து மென்சிந்தை யுள்ளும்' என்புழிப்போல.

எளிய திதுவன்றே யேழைகாள் யாதும்
அளியீர் அறிவிலீர் ஆவா—ஒளிகொள்மிடற்
றெந்தையராப் பூண்டுழலு மெம்மானை
யுண்ணினைந்த
சிந்தையராய் வாழும் திறம். 46

இ-ள்: ஒளி திகழும் நீலகண்டத்தையுடைய எமது தந்தையும் பாம்பினை அணிகலனுகப் பூண்டு உலவும் எம்பெருமானும் ஆகிய இறைவனை ஆழ்ந்து தியானிக்கும் உள்ளமுடையவர்களாய் வாழும் முறை யாகிய இது, அவனருளைப் பெறுதற்கு மிகவும் துணை புரியும் எளிய நெறியல்லவா? இங்ஙனமாகவும் ஏழை மக்களாகிய நீவிர் சிறிதும் அன்பில்லாதவராகவும் அறிவில்லாதவராகவும் உள்ளீர். நுமது செய்கை ஐயோ இரங்குதற்குரியதேயாம் எ-று.

'சிந்தையராய் வாழும் திறமாகிய இது எளியது அன்றே' என இயைத்துரைக்க. இங்ஙனம், பாட்டின் இறுதியிலுள்ள தொடர் முதலடியின் முதல் தொடரோடியைந்து பொருள் கொள்ள நிற்றலின் இது பூட்டுவிற் பொருள்கோள். இது எளியது அன்றே என்புழி ஏகாரத்தை வினவாகக் கொண்டு இஃது எளியதல்லவா? எளிதேயாம் எனப் பொருளுரைக்க. இனி, அன்றே யென்புழி ஏகாரத்தைத் தேற்றமாகக் கொண்டு, எம்மானை உள் நினைந்த சிந்தையராய் வாழும் திறமாகிய இது எளியதன்று மிகவும் அரிதே யாம் எனப் பொருள் கூறுதலும் உண்டு. யாதும்— சிறிதும். ஆஆ—ஐயோ, இரக்கக் குறிப்பு.

திறத்தான் மடநெஞ்சே சென்றடைவ தல்லாற்
பெறத்தானு மாதியோ பேதாய்—நிறத்த
இருவடிக்க ணேழைக் கொருபாக மீந்தான்
திருவடிக்கட் சேருந் திரு. 47

இ-ள்: அறியாமை பொருந்திய நெஞ்சமே நிறம் பொருந்திய மாவடு வகிரன்ன கண்களையுடைய உமாதேவியார்க்குத் தனது ஒரு பாகத்தைத் தந்த இறைவனது திருவடி நீழலிலே சேர்ந்து நுகரும் திருத் தகவிற்குரிய பேரின்பத்தை அவனை இடைவிடாது நெஞ்சத்துள்ளே நினைந்து வாழும் திருவருள் நெறியாற் சென்று அடைவதன்றி, அறிவிலியாகிய நீ நினது அரிய முயற்சி யொன்றினாலேயே பெறுதற்குரியை ஆவாயோ? (ஆகாய்) எ-று.

'திரு, பெறத்தானும் ஆதியோ' என இயைத் துரைக்க. 'சென்றடையாத திருவுடையானை' எனவும்,

'எந்தையீச னெம்பெருமான் ஏறமர் கடவுளென்
றேத்திச்
சிந்தைசெய் பவர்க்கல்லால் சென்றுகை
கூடுவ தன்றால்
கந்த மாமல உந்திக் கடும்புனல் நிவாமல்கு
கரைமேல்
அந்தண் சோலை நெல்வாயில் அரத்துறை
யடிகள் தம் அருளே'

எனவும் வரும் அருளிச் செயல்கள் இவண் ஒப்பு நோக்கத் தகுவனவாகும். 'ஏழைக்கு ஒருபாகம் ஈந்தான்' என்ற குறிப்பும் அது. வடி—மாவடு.

திருமார்பி லேனச் செழுமருப்பைப் பார்க்கும்
பெருமான் பிறைக்கொழுந்தை நோக்கும்—ஒருநாள்
இதுமதியென் றொன்றாக இன்றளவுந் தேரா
ததுமதியொன் றில்லா வரா. 48

இ-ள் : பகுத்துணர்வு ஒரு சிறிதும் வாய்க்கப் பெருத பாம்பாகிய அது, இறைவனது திருமார்பில் அணியப் பெற்றுள்ள செழுமை மிக்க பன்றிக் கொம்பினைப் பிறையெனக் கருதிப் பார்க்கும். அதே நிலையில் பெருமான் சடைமீது விளங்கும் பிறைத் திங்களையும் உற்று நோக்கும். இவ்விரண்டினுள் நிச்சயமாக இதுதான் பிறைச் சந்திரனென்று இன்றளவும் ஒரு நாளேனும் தெளிந்து கொள்ள முடியாது திகைப்புறுவதாயிற்று. எ-று.

ஒரு நாள்—ஒரு நாளேனும். ஒன்றாக—ஒருதலையாக, நிச்சயமாக. தேராது—தெளியாது. மதி ஒன்று இல்லா அரா-பகுத்துணர்வு சிறிதும் வாய்க்கப் பெருத பாம்பு. மதி ஒன்று இல்லா அராவாகிய அது, பார்க்கும், நோக்கும், தேராது என வினை முடிவு செய்க.

அராவி வளைத்தனைய அங்குழவித் திங்கள்
விராவு கதிர்விரிய வோடி—விராவுதலாற்
பொன்னோடு வெள்ளிப் புரிபுரிந்தாற் போலாவே
தன்னோடே யொப்பான் சடை. 49

இ-ள் : (நிகராவார் பிறரெவருமின்றித்) தனக்குத்தானே யொப்பாக விளங்கும் இறைவனது சடைக் கற்றைகள், வெள்ளியை அரத்தால் அராவி வளைத்தது போன்ற அழகிய பிறைச் சந்திரன் தண்ணிய ஒளிக்

கதிர்கள் எங்கும் பரவி விரிய ஓடிக் கலத்தலால் பொன்னுடன் வெள்ளியையும் கயிறுகளாகக் கொண்டு திரித்து முறுக்கி வைத்தாற்போலும் அல்லவா ? எ-று.

தன்னோடே யொப்பான்—தனக்கு உவமையில்லா தான் என்பது பொருள். சடை, போலாவே என இயைக்க. போலாவே—போலும் அல்லவா (போலும்). 'விரிசடைமேல், வெள்ளித் தகடன்ன வெண் பிறைசூடி' என்பது அப்பர் தேவாரம்.

சடைமேலக் கொன்றை தருகனிகள் போந்து
புடை மேவித் தாழ்ந்தனவே போலும்—முடிமேல்
வலப்பாலக் கோல மதிவைத்தான்றன் பங்கிற்
குலப்பாவை நீலக் குழல். (50)

இ-ள் : தனது திருமுடியின் வலப் பக்கத்திலே அழகிய பிறைத் திங்களையணிந்த சிவபெருமானது இடப்பாகத்திலுள்ள அழகிய பாவைபோல்வாராகிய உமையம்மையாரது கரிய கூந்தற் கற்றைகள், இறைவனது சடைமீது விளங்கும் அக்கொன்றை மலரிடத்து உண்டாகிக் கனிந்த கொன்றைக் கனிகள் பக்கத்தில் வந்து பொருந்தித் தாழ்ந்து தொங்குவனவற்றை ஒக்கும். எ-று.

குலப்பாவை நீலக்குழல், கொன்றை தருகனிகள் போந்து தாழ்ந்தனவே போலும் என்க.

குழலார் சிறுபுறத்துக் கோல்வளையைப் பாகத்
தெழிலாக வைத்தேக வேண்டா—கழலார்ப்பப்
பேரிரவில் ஈமப் பெருங்காட்டிற் பேயோடும்
ஆரழல்வாய் நீயாடும் அங்கு. (51)

இ—ள்: இறைவ (பேரூழிக்காமையாகிய) நள்ளிருட் பொழுதிலே (உலகமெலாம் சங்கரிக்கப் பட்ட) ஈமப் பெருங்காட்டிலே மிக்கெரியும் தீயின் நடுவில் நீ பேய்களுடன் கூடியாடும் அவ்விடத்திலே யும் கூந்தல் தாழ்ந்து பரவிய சிறிய முதுகினையும் திரண்டவளையலையும் உடைய நின்தேவியாகிய உமை நங்கையை நினது ஒரு பாகத்தில் அழகு பொருந்த வைத்துச் செல்லுதல் வேண்டா எ—று.

இருள் செறிந்த நள்ளிரவும், நெருப்புப் பரவிய புறங்காடும், பேய்ச் சுற்றமும் ஆகியவற்றைக் கண்டு உமாதேவியார் அஞ்சுவர் ஆதலின் இறைவனாகிய நீ நள்ளிரவில் பேயுடன் தீயில் நின்றாடும் அவ்விடத் திற்கு உமையை அழைத்துச் செல்லுதல் கூடாது என விலக்குமுகமாக, இறைவனது திருக்கூத்தின் அஞ்சத் தகும் தோற்றத்தினையும் நமது பிறவி நோய் தீர்க்கும் நன்மருந்தாக அத்திருக் கூத்தினைக் கண்டு நம்ம னோர்க்கு அருள் சுரந்தருளும் அன்னையாகிய உமா தேவியாரின் அமைதி நிலையையும் குறிப்பினால் உணர வைத்தமை காண்க. பேரிரவு—ஞாயிறு திங்கள் முதலிய யாவும் ஒடுங்கிய பேரூழிக்காலம் ஈமப் பெருங்காடு—மக்கள், தேவர் முதலிய எல்லா வுயிர் களின் உடம்புகளும் வெந்து சாம்பராகிய ஈமப் புறங்காடு.

அங்கண் முழுமதியஞ் செக்க ரகல்வானத்
தெங்கு மினிதெழுந்தா லொவ்வாதே—செங்கண்
திருமாலைப் பங்குடையான் செஞ்சடைமேல் வைத்த
சிரமாலை தோன்றுவதோர் சீர். 52

இ—ள்: சிவந்த கண்களையுடைய திருமாலைத் தனது ஒரு பாகத்தே கொண்டருளிய சிவபெருமானது

சிவந்த சடையின்மேல் நிரல் படத்தொடுத்து அணியப் பெற்ற வெள்ளிய தலைமாலை தோன்றும் அழகிய தோற்றமானது, விரிந்து பரவிய செவ்வானத்திலே அழகிய முழுமதியானது தான் பலவுருக் கொண்டு எல்லாப் பக்கங்களிலும் இனிமையுறத் தோன்றி ஒளி வீசுமானால் அவ்வழகிய தோற்றத்தை ஒக்குமன்றோ ? எ-று.

செவ்வானத்தில் தோன்றும் மதியானது, தான் ஒன்றாய் நில்லாது பல வடிவு கொண்டு எல்லாப் பக்கங்களிலும் தோன்றி ஒளி வீசினால் எவ்வாறிருக்குமோ அவ்வழகிய தோற்றத்தை யொத்ததே இறைவன் செஞ்சடைமேல் அணிந்த வெள்ளிய தலை மாலையின் தோற்றம் என்பது கருத்து. 'எங்கும் இனிதெழுந்தால்' என்பது அவ்வாறு ஒரு சந்திரன் பல வடிவு கொண்டு எவ்விடத்தும் தோன்றுதலில்லை யென்பதனை குறிப்பான் அறிவுறுத்தி இல்பொருளுவமையாய் நின்றது ஒவ்வாதே-ஒக்குமல்லவா ? (ஒக்கும் என்றவாறு). இனி ஏகாரத்தைத் தேற்றமாகக் கொண்டு, 'செவ்வானத்தில், முழு மதியம் பல கோத்து எழுந்தாலும் இறைவனது செஞ்சடைமேல் சிரமாலை தோன்றும் தோற்றத்திற்குச் சிறிதும் ஒவ்வாது' எனப் பொருள் கூறுதலும் உண்டு.

சீரார்ந்த கொன்றை மலர்தழைபபச் சேணுலவி
நீரார்ந்த பேரியாறு நீத்தமாய்ப் — பேரார்ந்த
நாண்பாம்பு கொண்டசைத்த நம்மீசன் பொன் முடிதான்
காண்பார்க்குச் செவ்வேயோர் கார். (53)

இ-ள் : பொருதற்கமைந்த வில்லிற் கட்டுதற்குரிய நாணை வாசுகியென்னும் பாம்பினைக் கொண்டு,

மற்ஞெரு பாம்பினை இடையிற் கச்சையாக அணிந்த நம் பெருமானது பொன்முடியானது, சிறப்பமைந்த கொன்றை மலர் செழிப்புற்று விளங்க நீர் நிரம்பிய கங்கையாறு பெருவெள்ளமாய் வானிடமெல்லாம் அலை வீசி யுலவப்பெற்று நேரே காண்பவர்களுக்கு ஒப்பற்ற கார்காலத்தின் தோற்றத்தைப் புலப்படுத்துவதாகும். எ—று.

நம்மீசன் பொன்முடி, கொன்றை மலர் தழைப்ப, யாறு நீத்தமாய் உலவி, காண்பார்க்குக் கார்(காலம்) போலும் என முடிக்க. உலவி, இடத்து நிகழ் பொருளின் தொழில் இடத்தின்மேல் நின்றது. கார், ஈண்டு ஆகுபெயராய்க் காலத்தை உணர்த்தி நின்றது. பேரி யாறு பெருக்கெடுத்தலும் கொன்றை மலர் பூத்துக் குலுங்குதலும் கார் காலத்தின் இயல்பாதலின் கங்கை யாற்றினையும் கொன்றை மலர்களையும் தன்னிடத்தே யுடைய இறைவன் திருமுடி, கார்காலத்தின் தோற்றத்தை யுடையதாயிற்று என்பது கருத்து. செவ்வே காண்பார்க்கு எனக் கூட்டுக. செவ்வே—நேரே.

காருருவக் கண்டத்தெங் கண்ணுதலே யெங்
கொளித்தாய்
ஓருருவாய் நின்னோ டுழிதருவான் — நீருருவ
மேகத்தாற் செய்தனைய மேனியான் நின்னுடைய
பாகத்தான் காணுமே பண்டு. (54)

இ—ள்: கரிய மேகத்தின் நிறம் வாய்ந்த திருநீலகண்டத்தையும் நெற்றிக் கண்ணையும் உடைய எம்பெருமானே, (நினது திருவருள் வண்ணமாகிய புருட சக்தியாகி) நின்னிற்பிரிவற ஒருருவாகவே ஒற்றித்துத் திரிபவனும், நீரின் தன்மை வாய்ந்த

மேகத்தைக் கொண்டு செய்ததுபோன்ற கரிய திருமேனியை யுடையவனும், நின் திருமேனியின் வலப் பாகத்தில் விளங்குபவனும் ஆகிய திருமால் நின் திருவடியைத் தேடிய அந்நாளில் அப்பெரியோன் காணுவண்ணம் நீ எவ்விடத்தே ஒளிந்திருந்தாய்?

'ஓருருவாய் நின்னோடு உழிதருவான்' என்பதற்கு "நீ மேற்கொண்ட பிச்சைக் கோலத்திற்கு இயைய ஒத்த மோகினி யுருவத்தினை மேற்கொண்டு நின்னுடன் தாருகா வனத்தில் திரிவான்' எனப் பொருளுரைத்தலும் பொருந்தும். நின்னுடைய பாகத் தான் காணுமே பண்டு எங்கொளிந்தாய் எனக் கூட்டுக.

பண்டமர ரஞ்சப் படுகடலி னஞ்சுண்டு
கண்டங் கறுத்ததுவு மன்றியே—யுண்டு
பணியுறுவார் செஞ்சடைமேற் பான்மதியி னுள்ளே
மணிமறுவாய்த் தோன்றும் வடு. (55)

இ-ள்: முன்னொரு காலத்தில் தேவர்கள் கண்டு அஞ்சியோடும்படி கடலிடத்தே தோன்றிய ஆலகால நஞ்சினை இறைவர் உண்டடக்கியதனல் அவரது திருமிடறு கறையினை யெய்தியதோ டன்றி பாம்பணிந்த நீண்ட சிவந்த சடையின்மேல் விளங்கும் பால்போலும் நிறத்தினையுடைய மதியினுள்ளே அழகிய கறையாகத் தோன்றும் வடுவும் உண்டு எ-று.

நஞ்சம் உண்டதனல் இறைவரது கண்டம் கறுத்ததோடமையாது அவர் சடைமேற் சூடிய மதி யிலும் மறுவாகிய வடுவுண்டாயிற்று என விடத்தின் கொடுமையினை மிகுத்துக் கூறியவாறு. கண்டங்

கருத்ததுவாகிய அதுவேயுமன்றிப் பால்மதியினுள்ளே வடுவும் உண்டு என ஓர் உம்மை விரித்துரைக்க. வடு—மாறுத் தழுப்பு.

வடுவன் றெனக்கருதி நீமதித்தி யாயிற்
சுடுவெண் பொடிநிறத்தாய் சொல்லாய் — படுவெண்
புலாற்றலையி னுள்ளூண் புறம்பேசக் கேட்டோம்
நிலாத்தலையிற் சூடுவாய் நீ. (56)

இ-ள்: நன்கு சுடப்பட்ட வெள்ளிய திருவெண்ணீற்றினை யணிந்த மார்பினையுடைய பெருமானே, இறந்துபட்ட (பிரமனது) புலால் நாற்றம் வீசும் தலையோட்டிலே நீ பிச்சை யேற்றுண்ணுதல் குறித்துப் புறத்தார் இழிவாகப் பேசக் கேட்டோம். நீயோ நிலவொளி வீசும் நிறைமதியினைத் தலையிற் சூடிய தூயோன். (புலால் நாறும் பிரம கபாலத்திற் பிச்சையேற் றுண்ணுதலாகிய) நின் செயல் பழிக்கத் தக்கதன்றென மதிப்பா யாயின் அங்ஙனம் மதித்தற் குரிய காரணங்களை அடியோங்களுக்கு அறிவுறுத் தருள்வாயாக எ-று

இறைவனாகிய நீ முற்றுணர்வினன் என்பதை யாம் நன்குணர்வோமென்பார் 'நிலாத் தலையிற் சூடுவாய் நீ' என்றும், நிறைமதியாளுகிய நீ புலால் நாறும் பிரம கபாலத்திற் பலியேற்றுண்ணுதலை இகழ்ந்துரைப்போர் நின் திருவருட்குப் புறம்பாய புறச்சமயத்தார் என்பார் 'புறம்பேசக் கேட்டோம்' என்றும், இங்ஙனம் எம்பெருமானாகிய நின்னைப் புறத்தார் இகழ்ந்துரைத்தலைக் கேட்டும் கவலையின்றி யிருத்தல் நின்னடியார்களாகிய எம்மனோர்க்குத் தகுதியன்றாதலின் அங்ஙனம் புறம்பேசுவார் வாயடங்க

நின் அருட்செயலின் தூய்மையினை எங்களுக்கு விளங்க அறிவுறுத்தல் வேண்டுமென்பார் 'சொல்லாய்' என்றும் கூறினர். புறம் - சிவபெருமானது முழு முதற்றன்மையை ஏற்றுக்கொள்ளாத புறச்சமய வாதிகள். இனி, புறம்பு ஏச எனப் பிரித்துப் பொருள் கூறினும் ஆம்.

நீயுலக மெல்லாம் இரப்பினும் நின்னுடைய
தீய அரவொழியச் செல்கண்டாய் — தூய
மடவரலார் வந்து பலியிடார் அஞ்சி
விடவரவ மேலாட மிக்கு. (57)

இ-ள்: எங்கள் இறைவனாகிய நீ, நின் தகுதிக்கு மாருக உலகமெலாஞ் சென்று திரிந்து இரத்தல் தொழிலை மேற்கொண்டாயாயினும் நின் திருமேனியில் ஊரும் தீங்குதரும் பாம்பினை விட்டு விட்டுச் செல்வாயாக. (இங்ஙனமன்றி அதனையும் உடன்கொண்டு செல்வாயாயின்) நஞ்சுடன் கூடிய அப் பாம்பு சினம் மிக்குப் படம் விரித்து ஆட (அதுகண்டு) அஞ்சி, உளந்தூயராகிய இளமகளிர் நின்முன் வந்து பலியிட மாட்டார்கள், எ-று.

நின்பால் அன்புடையாரிடத்து அச்சந் தரும் தோற்றத்தை விடுத்து அமைதியளிக்கும் திருக்கோலத்துடன் சென்று உய்யக்கொள்க என இறைவனை நோக்கி அம்மையார் வேண்டுவதாக இத்திருப்பாடல் அமைந்துளது. 'இரப்பினும்' என்புழி உம்மை, இனி இரத்தலாகாது என்பது பட நின்றது.

மிக்க முழங்கெரியும் வீங்கிய பொங்கிருளும்
ஒக்க வுடனிருந்தால் ஒவ்வாதே—செக்கர்போல்

ஆகத்தான் செஞ்சடையும் ஆங்கவன்றன் பொன்
னுருவிற்
பாகத்தான் பூங்குழலும் பண்பு. (58)

இ-ள்: அந்தி வானத்தை யொத்த செம்மேனி யம்மானாகிய சிவபெருமானது சிவந்த உடையும் பொன்னார் மேனியனாகிய அவனது ஒருபாகத்தில் விளங்கும் உமையம்மையாரது கரிய கூந்தலும் ஒருங்கு கூடியிருத்தலின் தோற்றமானது, முழங்கி யெரியும் செறிந்த தீத்திரளும் திணிந்த கரிய இருளும் ஓரிடத்தே ஒருங்கு கூடியிருக்குமானால் அவற்றின் தோற்றத்தை ஒக்குமல்லவா? எ-று.

'உடனிருந்தால்' என்ற தொடர், அங்ஙனம் உடனிருத்தல் இயல்பன்றென உணர்த்தி நின்றது.

பண்புணர மாட்டேனன் நீயே பணித்துக்காண்
கண்புணரு நெற்றிக் கறைக்கண்டா— பெண்புணரும்
அவ்வுருவோ மாலுருவோ ஆனேற்றாய் நீறணிவ
தெவ்வுருவோ நின்னிருவ மேல். (59)

இ-ள்: கண் விளங்கும் நெற்றியினையும் நஞ்சக்கறை பொருந்திய திருமிடற்றினையும் உடைய பெருமானே, இடபத்தினை ஊர்தியாக உடையவனே, நின் திருமேனியின் மேல் திருநீற்றினை யணிந்துகொள்வது பெண்ணொரு பாகமாகிய இடப்பாகத் திருவுருவமோ, அன்றித் திருமால் பொருந்திய வலப்பாகத் திருவுருவமோ இவ்விரண்டனுள் எவ்வுருவமோ என நின் திருமேனியின் இயல்பினை உணர வல்லேனல்லேன். நீயே பணித் தருள்வாயாக.

மேலாய மேகங்கள் கூடியோர் பொன்விலங்கல்
போலாம் ஒளிபுதைத்தால் ஒவ்வாதே— மாலாய
கைம்மா மதக்களிற்றுக் காருரிவை போர்த்தபோ
தம்மான் திருமேனி யன்று. (60)

இ-ள்: ஒரு கையினையுடைய மிகப்பெரிய விலங்காகிய மதமிக்க யானையினது கரிய தோலினை உரித்துப் போர்த்த அப்பொழுது இறைவனது திருமேனியின் தோற்றமானது, மேலே விண்ணிடத்தே திரியும் மேகங்கள் யாவும் ஒருங்கு கூடி ஒப்பற்றதாகிய பொன்மலை போன்று உயர்ந்து தோன்றும் ஒளிப்பிழம்பினை மூடிப் புதைத்தால் [எவ்வாறிருக்குமோ] அத்தகைய தோற்றத்தினை ஒக்குமல்லவா?

அன்றுந் திருவுருவங் காணாதே யாட்பட்டேன்
இன்றுந் திருவுருவங் காண்கிலேன் — என்றுந்தான்
எவ்வுருவோன் நும்பிரான் என்பார்கட்
கென்னுரைக்கேன்
எவ்வுருவோ நின்னுருவ மேது. (61)

இ-ள்: (இறைவன் உளன் என அறிந்தோர் சொல்லக் கேட்ட)அன்றும் நினது திருவுருவைக் காணாமலேயே நின் திருவடிக்கு ஆளாயினேன். (நினது திருவருள் விளக்கம் கைவரப்பெற்ற) இன்றும் நினது திருவுருவை முடியக் காண்கின்றிலேன், 'எக்காலத்தும் நும் இறைவன் எவ்வுருவினன்' என என்னை நோக்கி வினவுவார்க்கு யான் எங்ஙனம் விடை கூறுவேன்? எம்பெருமானே, நினது திருவுருவந்தான் எத்தகைய வடிவினதோ? எத்தன்மையதோ? பணித்தருள்வாயாக. எ-று

இறைவனாகிய முதல்வனை அவனருளாலன்றி உள்ளவாறு காண இயலாதெனை உலகினர்க்கு அறிவுறுத்துவார், 'எவ்வுருவோன் நும்பிரான் என்பார்கட் கென்னுரைக்கேன், எவ்வுருவோ நின்னுருவம் ஏது' என இறைவனை நோக்கி வினவினார். 'அவனருளே கண்ணாகக் காணினல்லால், இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவன் இறைவன் என்றெழுதிக் காட்டொணாதே' என வரும் ஆளுடைய அரசர் வாய்மொழி இங்கு நினைத்தற் குரியதாம்.

ஏதொக்கும் ஏதொவ்வா தேதாகு மேதாகா
தேதொக்கு மென்பதனை யாரறிவார்— பூதப்பால்
வில்வேட னாகி விசயனோ டேற்றநாள்
வல்வேட னான வடிவு. (62)

இ-ள் : பூதகணங்கள் போற்ற வில்லேந்திய வேடுவனாகி அருச்சுனனுடன் போர் எதிர்ந்த அந்நாளில் வலிய வேடனாக விளங்கிய அத்திருவுருவம், எத்தகைய அழகிய தோற்றத்தை ஒத்திருக்கும்? எதனை ஒவ்வாது? அதற்குப் பொருந்தியது எது? பொருந்தாதது எது? எதனோடு பொருந்தும் என்ற இவ்வியல்பினை அறிந்து சொல்ல வல்லார் யார்? (ஒருவருமிலர்) எ-று.

பூதப்பால்—பூதகணங்களினிடையே. இனி, பூதம் என்றசொல் சென்ற காலம் என்ற பொருளில் வந்ததாகக் கொண்டு, பூதப்பால்— முன்னாளில் எனப் பொருள் கூறுவாருமுளர்.

வடிவுடைய செங்கதிர்க்கு மாருய்ப் பகலே
நெடிதுலவி நின்றெறிக்குங் கொல்லோ—கடியுலவு
சொன்முடிவொன் றில்லாத சோதியாய்
சொல்லாயால்
நின்முடிமேற் றிங்க ணிலா. (63)

இ-ள்: சொல்லின் எல்லையைக் கடந்து விளங்கும் சோதிப்பொருளாகிய பெருமானே, மணம் வீசும் நினது திருமுடிமேல் விளங்கும் பிறைத் திங்களானது, தேயாத வடிவுடைய முழு மண்டிலமாகிய சிவந்த சூரியனுக்கு மாருகப் பகலிலும் நெடிது இயங்கி நிலவொளியை வீசவல்லதோ? சொல்வாயாக எ-று.

கடியுலவு நின்முடிமேல் திங்கள், செங்கதிர்க்கு மாருய்ப் பகலே நெடிதுலவி நின்று நிலா எறிக்குங் கொல்லோ? எனக் கூட்டிப் பொருள் கொள்க. கடி-நறுமணம். சொல் முடிவு ஒன்று இல்லாத-உரை முடிவுக்கு அகப்படாது அப்பாற்பட்ட. எல்லா அண்டங்களுக்கும் அப்பாற்பட்டு விளங்கும் இறைவனை யடைந்த தேய்மதியும் தேயாமண்டிலமாகிய ஞாயிற்றின் கதிர்களால் ஒளி மழுங்காது பகற்காலத்திலும் நெடிது நின்று தனது குளிர்ந்த நிலவொளியைப் பரப்புவதாயிற்று என அம்மையார் தாம் கண்ட தெய்வக் காட்சியை இத்திருப்பாடலில் குறிப்பால் விளக்கிய திறம் அறிந்து மகிழத்தக்கதாகும்.

நிலாவிலங்கு வெண்மதியை நேடிக்கொள்
வான்போல்
உலாவி யுழிதருமா கொல்லோ-நிலாவிருந்த
செக்கரவ் வானமே யொக்குந் திருமுடிக்கே
புக்கரவங் காலையே போன்று. 64

இ-ள் : பிறை திகழும் அழகிய அந்தி வானத்தை யொத்து விளங்கும் இறைவனது திருமுடியின்கண் புகுந்த பாம்பானது, நிலவொளி வீசும் வெண் பிறையைத் தேடிப் பற்றிக்கொள்ளக் கருதியதை யொத்துச் சடையிடமெங்கும் காற்றைப் போன்று விரைந்துலவித் திரிகின்றதோ? எ-று.

புக்க அரவம் என்பதில், புக்க என்னும் பெயரெச்சத்து அகரம் விகார வகையால் தொக்கது. கால்-காற்று. அரவம், வெண்மதியை நேடிக் கொள்வான்போல், காலேயே போன்று உலவி உழிதரும்கொல் என இயையும். 'நேடிக்கொள்வான் போல்' என்றதனால் மதியைக் கவர்ந்து பற்றிக் கொள்ளுதல் பாம்பின் கருத்தன்றென்பது இனிது புலனும். பிறை திகழும் செஞ்சடையில் நாகம் ஊர்ந்து திரியும் காட்சியினைத் தற்குறிப்பேற்ற அணியமைய அம்மையார் புனைந்துரைத்தமை காண்க.

காலேயே போன்றிலங்கு மேனி கடும்பகலின்
வேலேயே போன்றிலங்கும் வெண்ணீறு — மாலேயின்
தாங்குருவே போலுஞ் சடைக்கற்றை மற்றவற்கு
வீங்கிருளே போலு மிடறு. (65)

இ-ள்: இறைவனாகிய அப்பெருமானுக்கு (ஞாயிறு தோன்றிய) காலைப் பொழுதே போன்று திருமேனி செந்நிற ஒளியினதாய்த் திகழும். அத் திருமேனியிற் பூசப் பெற்ற திருநீறு நண்பகற் காலத்தைப் போன்று வெண்ணிற ஒளியினதாய் விளங்கும். அப்பெருமானது சடைத் தொகுதி மாலைக் காலத்தே பொருந்திய அந்தி வானமே போன்று செம்பொன்னிறத்ததாய் ஒளிரும். இறைவனது திருமிடறு இருள் திணிந்த நள்ளிரவினை யொத்துத் தோன்றும் எ-று.

சிவபெருமானுடைய திருமேனி, அம்மேனியிற் பூசப்பெற்ற வெண்ணீறு, சிவந்த சடைத் தொகுதி, திருநீலகண்டம் என்பவற்றிற்கு முறையே ஒருநாள் என்ற காலப் பகுதியின் கூறுகளாகவுள்ள காலை, நண்பகல், மாலை, நள்ளிரவு என்னும் சிறு பொழுதுகளை உவமை கூறியதன் நோக்கம், கால காலனாகிய இறைவனைக் காலத்தின் தோற்றமுடையவனாகவும் எளிதில் வழிபட்டுய்தல் கூடும் என அறிவுறுத்தற் பொருட்டேயாம். 'நெருநலையாய் இன்றாகி நாளையாகி நிமிர்புன் சடையடிகள் நின்றவாறே' என வரும் நின்ற திருத்தாண்டகம், காலங் கடந்த முதல்வனைக் காலத்தின் இயல்பில் நின்றருள் செய்பவனாகப் போற்றுதல் காண்க.

மிடற்றில் விடமுடையீர் உம்மிடற்றை நக்கி
மிடற்றில் விடங்கொண்ட வாறோ — மிடற்றகத்து
மைத்தாம் இருள்போலும் வண்ணங் கரிதாலோ
பைத்தாடு நும்மார்பிற் பாம்பு. (66)

இ-ள்: திருமிடற்றில் நஞ்சினை யடக்கிய இறைவரே, நுமது மார்பிடத்தே படம் விரித்தாடும் பாம்பானது, நுமது கண்டத்தை நக்கினமையால் தானும் நஞ்சுடைய தாயிற்றோ? நுமது கண்டத்தினகத்தே யமைந்த குழைத்தமையின் தன்மை வாய்ந்த இருள்போலும் வண்ணத்தினைப் பெற்றுத் தானும் கரிய நிறமுடையதாய்த் தோன்றுகின்றது ஆதலின் எ-று.

ஆல், ஓ என்பன அசை. பைத்து—படம் விரித்து; 'பை' என்ற பெயரடியாகப் பிறந்த வினைச் சொல். பை—படம். இறைவனது திருமார்பில் விளங்கும் பாம்பு அப்பெருமானது திருமிடற்றின் கருமை நிறம்

வீசப் பெற்று உடல் கரிதாய்த் தோன்றும் புறத் தோற்றத்தினை எடுத்துக் காட்டி, இதுபோலவே பாம்பின் வாயினுள்ளே யமைந்த நஞ்சும் அப் பாம்பு இறைவனது நஞ்சு பொருந்திய கண்டத்தினை நக்கினமையால் ஏற்பட்டதோ என அம்மையார் புனைந்துரைத்த திறம் மிகவும் சுவை தருவதாகும்.

பாம்பும் மதியும் மடமானும் பாய்புலியுந்
தாம்பயின்று தாழருவி தூங்குதலால் — ஆம்பொன்
உருவடிவில் ஓங்கொளிசேர் கண்ணுதலான் கோலத்
திருவடியின் மேய சிலம்பு. (67)

இ-ள் : பொன்னிறம் வாய்ந்த திருவுருவமும் மிக்குத் தோன்றும் பேரொளியும் உடைய கண்ணுதற் கடவுளது அருட் கோலத்தின் திருந்தகவிற்றுகிய தோற்றம், பாம்பும் சந்திரனும் இளமை பொருந்திய மானும் பாய்ந்து கொல்லும் புலியும் ஆகிய இவை பொருந்தப் பெற்று விளங்குதலாலும் கங்கையாற்றின் நீர் அருவி போன்று தாழ்ந்தொலித்தலாலும் அடி பரந்து உயர்ந்த மலையொன்றிருக்குமாறுல் அதன் தோற்றத்தை யொக்கும் எ-று.

கண்ணுதலான் கோலத்திரு, பாம்பு, மதி, மான், புலி என்னும் இவை பயிலப் பெறுதலாலும், அருவி நீர் ஒலித்தலாலும் சிலம்பு (போல்வது) ஆம் என முடிக்க. சிலம்பு—மலை, 'பாம்பும் மதியும் மட மானும் பாய் புலியும் தாம் பயின்று தாழருவி தூங்குதலால்' என்ற தொடர், இறைவன் திருமேனிக்கும் மலைக்கும் பொருந்தச் சிலேடையாய் நின்றது. இஃது ஏதுப் பொருட்டாய் வந்த சிலேடையுவமை. அடியின்மேய சிலம்பு—அடி பரந்து உயர்ந்த மலை. இனி, மூன்றும் அடியின்

எதுகைக்குப் பொருந்த 'வடிவின்மேய சிலம்பு' எனப் பாடங்கொண்டு, வடிவும் ஒளியும் ஒருங்கு பொருந்தப் பெற்ற மலை எனப் பொருள் கூறினும் ஆம்.

சிலம்படியா ளூடலைத் தான்றவிர்ப்பான் வேண்டிச்
சிலம்படிமேற் செவ்வரத்தஞ் சேர்த்தி — நலம்பெற்
றெதிராய செக்கரினும் இக்கோலஞ் செய்தான்
முதிரா மதியான் முடி. (68)

இ-ள்: முதிராத இளம்பிறையை யணிந்த சிவ பெருமான், மலை மகளாராகிய உமாதேவியாரது ஊடலைத் தான் தவிர்த்தல் கருதித் தனது திருமுடியை அத் தேவியாரது சிலம்பணிந்த திருவடிமேற் பூசப் பெற்றுள்ள செம்பஞ்சின் நிறத்தோடு சேர்த்தித் (தலை தாழ்த்தி வணங்கி) தனது சடையினை யொத்து விளங்குவதாகிய செவ்வானத்தைக் காட்டிலும் அணி நலம் பெற்றுத் தோன்றுவதாகிய இவ்வழகிய கோல முடையதாகப் புனைந்துகொண்டான் எ-று.

சிலம்பு அடியாள் - மலையின்வழிவந்தவள்; மலை யரசன் மகள். சிலம்பு அடி—சிலம்பணிந்த திருவடி. செவ்வரத்தம்...செம்பஞ்சு; மகளிர் காலில் பூசப்பெறும் செந்நிறமுடைய குழம்பு. முதிராமதியான் என்றும் முதுமை நிலை யடையாத இளம்பிறையை அணிந்த வன். இத் தொடர் நிரம்பாத அறிவுடையான் என வேறொரு பொருளுந் தோன்ற நின்றமையுணர்க. முதிராமதியான் ஆதலின் முடிதாழ்த்து வணங்கி இத் தகைய கோலத்தைச் செய்துகொண்டான் என்பது ஒரு நயம். காம நுகர்ச்சி யில்லாத இறைவன் உமா தேவியாரது ஊடலைத் தணிவித்தல் வேண்டி அவருடைய திருவடியில் முடிதோய வணங்கினன்;

உலக மக்கள் அன்பினால் ஊடியும் கூடியும் போகம் நுகர்தலாகிய இல்வாழ்க்கையினை இனிது நிகழ்த்துதற் பொருட்டு' என அம்மையார் குறிப்பால் அறிவுறுத்தருளினாராயிற்று. திருமுருகாற்றுப்படையில் 'ஒருமுகம் மடவரல் வள்ளியொடு நகையமர்ந்தன்றே' என வருந் தொடர்க்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரை விளக்கமும் 'தென்பாலு கந்தாடும் தில்லைச் சிற்றம்பலவன்......... பெண்பாலு கந்திலனேற் பேதாயிரு நிலத்தோர், விண்பாலியோகெய்தி வீடுவர் காண் சாழலோ' என வரும் மேற்கோளும் இங்குக் கருதத் தக்கன.

முடிமேற் கொடுமதியான் முக்கணான் நல்ல
அடிமேற் கொடுமதியோங் கூற்றைப்—படிமேற்
குனியவல மாமடிமை கொண்டாடப் பெற்றோம்
இனியவல முண்டோ எமக்கு. (69)

இ-ள்: திருமுடிமேல் வளைந்த பிறையினை யணிந்தவனும் (ஞாயிறு, திங்கள், தீயென்னும்) மூன்று கண்களையுடையவனும் ஆகிய இறைவனுடைய நன்மை பொருந்திய திருவடிகளை யாம் எமது தலைமேற் கொண்டமையால் இனி (உயிரைக் கவரவரும்) கூற்றுவனைக் கண்டு சிறிதும் மதிக்கமாட்டோம். (அடியார்களைக் கண்டால்) நிலத்தின் மீது வீழ்ந்து வணங்க வல்லோம் ஆகிய அடிமைத் திறத்தைப் பாராட்டி மேற்கொள்ளப் பெற்றோம். (இத்தன்மையினேமாகிய) எங்களுக்கு எத்தகைய துன்பமும் உளதாமோ (இல்லை) எ-று.

கொடுமதி—வளைவுடைய பிறைச்சந்திரன். இறைவன் திருவடி பிறவிப் பிணிக்கு மருந்தாகலின்

'நல்ல அடி' என்றார். ஈண்டு நன்மையாவது, தன்னை வழிபட்ட அந்தணாளராகிய மார்க்கண்டேயரது உயிர் கவரவந்த கூற்றுவனைக் கீழே விழ உதைத்துத் தன்னடியாராகிய அவரைப் பாதுகாத்த பேரருளுடைமை. இங்ஙனம் கூற்றுதைத்த திருவடியை எமது முடிமேற் கொண்டமையால் இனிக் கூற்றுவனைச் சிறிதும் மதியோம் என்பார் 'முக்கணான் நல்லஅடி மேற்கொடு கூற்றை மதியோம்' என்றார். மேற்கொடு- (தலை) மேற் கொண்டு. குனிதல்-வளைதல்; வணங்குதல். மேலும் மேலும் எல்லையின்றி வரும் பிறவித் துன்பங்கள் எமக்கு உளவாகா என்பார், 'இனி அவலமுண்டோ எமக்கு, என்றார்.

எமக்கிதுவோ பேராசை யென்றுந் தவிரா
தெமக்கொருநாட் காட்டுதியோ எந்தாய்—
அமைக்கவே
போந்தெரிபாய்ந் தன்ன புரிசடையாய் பொங்கிரவில்
ஏந்தெரிபாய்ந் தாடு மிடம். (70)

(பெரு வெள்ளத்தைச் சொரிந்து) அணைக்கவும் அணையாது பெருந்தீ சுடர்விட்டெரிந்தா லொத்த முறுக்கமைந்த சடையினையுடைய பெருமானே, இருள் மிக்க நள்ளிரவிலே பொங்கி மேலெரியும் தீயினிடையே நீ குதித்து ஆடும் இடத்தினை எமக்கு என்றாவது ஒரு நாள் காட்டியருள்வாயோ? எந்தையே, (அவ்விடத்தைக் காண வேண்டுமென்ற) இப்பேராசையோ எமக்கு என்றும் அடங்காத நிலையிலுள்ளது எ—று.

அறிவு ஆற்றல் முதலிய தகுதிக்கு ஏற்பத் தோன்றும் விருப்பத்தை ஆசை எனவும், அவரவர் தகுதிக்கு ஒவ்வாத நிலையில் அவர்கள்பால் தோன்றும்

அவாவினைப் பேராசை யெனவும் வழங்குதல் மரபு. எந்தாய் நீ எரிபாய்ந்தாடும் இடத்தை யாம் காண வேண்டும் எனவிரும்புவது எமது தகுதிக்கு மேற்பட்ட தென்பதனை யாம் அறிவோம் என்பார் 'எமக்கிதுவோ பேராசை' என்றும், இது எம்மாற் காணவியலாதது என்பதனை யுணர்ந்திருந்தும் இவ் வேட்கையினை விட்டொழித்தற்கியலாத நிலையில் உள்ளோம் என்பார் 'என்றுந்தவிராது' என்றும் கூறினார். யாம் காணும் ஆற்றல் பெற்றிலேமெனினும் எத்தகைய பொருளையும் காட்டவல்ல நினது பேராற்றலுக்கு ஒரு சிறிதும் குறைவில்லையாதலின் எமது வேட்கையினை நிறைவேற்றி வைப்பது எந்தையாகிய நினது கடமையாம் என வற்புறுத்துவார் 'எமக்கொரு நாட் காட்டுதியோ எந்தாய் எனப் பரிந்து வேண்டினார்.

இடப்பால வானத்தெழு மதியை நீயோர்
மடப்பாவை தன்னருகே வைத்தால் — இடப்பாகங்
கொண்டாள் மலைப்பாவை கூறென்றுங் கண்டிலங்
காண்
கண்டாயே முக்கண்ணாய் கண். (71)

இ-ள்: வானத்தினிடத்தே விளங்கும் பிறைமதியை இறைவனாகிய நீ (நின் திருமுடியிலுள்ள) ஒப்பற்ற பாவைபோல்வாளாகிய கங்கை நங்கையின் அருகே முடிமேல் இடப்பக்கத்தில் அணிந்துள்ளனையாயின் நினது இடப் பாகத்தினைத் தனக்கேயுரியதாகக் கொண்ட மலைமகளாகிய உமாதேவியின் திருமேனி நிறத்தினைச் சிறிதும் கண்டிலோம். மூன்று கண்ணுடையாய் நீயாயினும் கண்டனையோ? கருதிப் பார்ப்பாயாக எ-று.

பிறை மதியினை இடப்பால் திருமுடிமேல் அணிந்தமையால் அதன் நிலவொளி வீசப் பெற்று இடப் பாகத்தின் நிறமும் வெண்மையொளி விரவி வலப்பாகம் போல் தோன்றுகின்றது எனக் குறிப்பித்தவாறு. பின்னர் மலைப்பாவையென விளங்க வைத்தமையால் முன் மடப்பாவையென்றது கங்கையை என்பது நன்கு புலனும்.

கண்டெந்தை யென்றிறைஞ்சிக் கைப்பணியான் செய்யேனேல்
அண்டம் பெறினும் அதுவேண்டேன் - துண்டஞ் சேர்
விண்ணாளுந் திங்களாய் மிக்குலக மேழினுக்குங்
கண்ணாளா ஈதென் கருத்து. (72)

இ-ள்: வானிடத்தே இயங்கும் கீற்றுய்ப் பொருந்திய பிறைத் திங்களை யணிந்த பெருமானே, மிகப் பெரியனவாய ஏழுலகங்களையும் கண்போன்று பாது காக்கவல்ல கடவுளே, நின்னை உனது திருவருளாற் காணப்பெற்று, என் தந்தையே என்று அன்பினல் அழைத்து வணங்கி, என்னுல் இயன்ற கைத்திருத் தொண்டினைச் செய்து மகிழேனுயின், அண்டத்தினை ஆளும் உயர்ந்த பதவி தானே வந்து கிடைத்தாலும் அதனை ஒரு பொருளாக விரும்பமாட்டேன். இதுவே எனது உள்ளத்தின் உறுதியான கருத்தாகும் எ-று.

'விண் ஆளும் துண்டஞ்சேர் திங்களாய், மிக்க உலகம் ஏழினுக்கும் கண்ணாளா' என்ற தொடரை முதற்கண் கூட்டிப் பொருள் கொள்க. விண் ஆளும் என்புழி ஆளுதல் என்ற சொல் பல்காலும் பயின்று இயங்குதல் என்னும் பொருளில் வந்தது. அம்மையார்

இறைவனை நோக்கி வேண்டும் வேண்டுகோளாக அமைந்த இத்திருப்பாடலில், 'கூடும் அன்பினிற் கும்பிடலேயன்றி, வீடும் வேண்டா' விறலின் விளங்கிய அடியாரியல்பு இனிது புலனாதலறிக.

கருத்தினால் நீகருதிற் றெல்லாம் உடனே
திருத்தலாஞ் சிக்கெனநான் சொன்னேன் —
பருத்தரங்க
வெள்ளநீ ரேற்றான் அடிக்கமலம் நீவிரும்பி
உள்ளமே யெப்போதும் ஓது. (73)

இ-ள்: நெஞ்சமே, ஆழ்ந்த நுண்ணுணர்வினால் நீ கருதியது அனைத்தும் திருத்தமுறப் பெறலாம். அங்ஙனம் பெறுதற்குரிய நெறியினை இப்பொழுது யான் உறுதியாகச் சொல்லுகின்றேன். (கேட்பாயாக). பெரிய அலைகளையுடைய பெரு வெள்ளமாய் வந்த கங்கைப் புனல் முழுவதையும் தனது சடைக் கற்றையிலே ஏற்றருளிய சிவபெருமான் திருவடித் தாமரைகளை நீ எப்போதும் அன்புடன் நினைந்து ஓதுவாயாக எ—று.

கருத்து-ஆழ்ந்துணரும் நுண்ணறிவு கருதிற்று எல்லாம்-கருதியது முழுவதும்; எல்லாம் என்பது எஞ்சாமைப் பொருளில் வந்தது. திருத்தலாம்-திருத்தமாகப் பெறலாம். சிக்கென-உறுதியாக. தெளிவாகச் சொல்கின்றேன் என்பார் சொன்னேன் என இறந்த காலத்தாற் கூறினார். பருத் தரங்கம்-பெரிய அலை. பத்தியினால் மறவாது ஏத்துக என்பார் 'நீ விரும்பி எப்போதும் ஓது' எனப் பணித்தருளினார்.

ஓத நெடுங்கடல்கள் எத்தனையும் உய்த்தட்ட
ஏதும் நிறைந்தில்லை யென்பரால்—பேதையர்கள்
எண்ணா திடும்பலியால் என்னோ நிறைந்தவா
கண்ணார் கபாலக் கலம். (74)

இ-ள்: நெற்றிக் கண்ணுடைய இறைவர் ஏந்திய கபாலமாகிய பலிப் பாத்திரம், அலைகள் மறியுமியல்பினவாகிய எத்தனையோ பெருங்கடல்களின் நீரைக் கொண்டு பெய்தாலும் சிறிதளவும் நிரம்பாத பெருமையுடையதென்று (அவரது திருவருள் பெற்ற) சான்றோர் கூறுவர் அங்ஙனமாகவும் (தாருகா வனத்தில் வாழ்ந்த முனிவர்களின் மனைவியராகிய) பேதையர்கள் தம்முணர்விழந்து பெய்த சிறிய பலிப்பொருளால் நிறைந்திருத்தல் எவ்வாறு?

பிரம கபாலமாகிய அதனை நிரப்புதல் வேண்டும் என்ற எண்ணத்துடன் கடல்களின் பெரும் புனலையே கொண்டு வந்து நிரப்பினாலும் நிரம்பாத பெருமை வாய்ந்த உண்கலம் அது. அதனை நிரப்ப வேண்டுமென்ற கருத்தின்றிப் புறத்தே சிந்தும் நிலையில் தாருகா வனத்து மகளிர் இட்ட சிறிய பிச்சைப் பொருளால் அது நிறைதல் கூடுமோ என அம்மையார் வினவியவாறு. ஓடேந்திப் பிச்சை யேற்கும் வடிவுடன் இறைவன், எழுந்தருளியது தமது உண்கலத்தை நிறைத்தற் பொருட்டன்றென்றும் எவ்வுயிர்க்கும் உயிர்க்குயிராய் உள்நின்றருளும் முழுமுதற்கடவுளாகிய தன்னை அறியாமையால் எண்ணாதிகழ்பவரும் எண்ணி உய்திபெறுதற் பொருட்டே இறைவன் இங்ஙனம் ஓடேந்திப் பலிதிரிகின்றான் என்றும் அம்மையார் இத்திருப் பாடலில் உய்த்துணர வைத்தமை உணர்ந்து மகிழத்தக்கதாகும்.

பிற தெய்வங்களுக்கில்லாத நெற்றிக் கண்ணினைத் தமக்கேயுரியதாகக் கொண்டமையால் 'கண்ணார்' என்பது சிவபெருமானுக்குரிய திருப்பெயராயிற்று. இனி, எவ்வுயிர்க்கும் கண் போன்று எப்பொருளையும் காட்டியருள்செய்ய வல்லவராதலின் கண்ணார் என்பது இறைவனுக்குரிய பெயராயிற்று எனக் கொள்ளுதலும் பொருந்தும். கண்ணார் என்ற பெயர் சிவபெருமானுக்குரிய தென்பதனைக் 'கண்ணார் கோயில்' என் வழங்கும் உலக வழக்கினாலும் இனிதுணரலாம். இனி, கண்ணார் என்பதைப் பிரம கபாலத்திற்கு அடையாக்கி, கண் ஆர்-இடம் அகன்ற, கண்கள் பொருந்திய எனப் பொருளுரைத்தலும் உண்டு. அட்ட-பெய்ய. ஏதும்-சிறிதும். நிறைந்த தில்லை யென்பது நிறைந்தில்லை யென நின்றது.

கலங்கு புனற்கங்கை யூடாட லாலும்
இலங்கு மதியியங்க லாலும் - நலங்கொள்
பரிசுடையான் நீண்முடிமேற் பாம்பியங்க லாலும்
விரிசடையாங் காணில் விசும்பு. (75)

இ—ள்: எல்லா நலங்களையும் தன்னகத்தே கொண்டு திகழும் இயல்புடையானாகிய இறைவனது நீண்ட முடிமேல் விரிந்து தோற்றும் செஞ்சடையினைக் கருதி நோக்குவோமானால், அது, புனல் நிறைந்த கங்கையாறு இடையே பரவியோடுதலாலும் நில வொளி வீசும் பிறைமதி இயங்குதலாலும் பாம்பு இயங் குதலாலும் விசும்பினை யொத்து விளங்குவதாகும்.

கங்கையும் திங்களும் பாம்பும் இயங்குதல், இறை வனது சடைக்கும் விசும்புக்கும் அமைந்த பொதுத் தன்மை. விசும்பில் இயங்கும் பாம்பு—இராகு கேதுக் களாகிய கோள்கள். நலங்கொள் பரிசு உடையான்—

அடிபேரிற் பாதாளம் பேரும் அடிகள்
முடிபேரின் மாமுகடு பேரும்— கடகம்
மறிந்தாடு கைபேரின் வான்றிசைகள் பேரும்
அறிந்தாடும் ஆற்ற அரங்கு. (77)

இ-ள்: எம் இறைவரே, (ஊன்றுமலர்ப் பாதமாகிய) நும் திருவடி சிறிது இடம் பெயருமாயினும் கீழுள்ள உலகுகள் தத்தம் நிலைபெயர்ந்து அழிந்துவிடும் (அண்டமுற நிமிர்ந்தாடும்) நுமது திருமுடி சிறிது இடம் பெயருமாயினும் அண்டமுகடு சிதர்ந்தழியும். கடகம் என்னும் அணி புடைபெயர்ந்து புரளும் நும்முடைய திருக்கைகள் வானிடத்தே சிறிது இடம் பெயரினும் வானமுந் திசைகளும் நிலைகெட்டழிவன. (நீர் ஆடல் புரிதற்கமைந்த பெருவெளியாகிய) இவ்வரங்கு நுமது திருக்கூத்தினைத் தாங்குதற்கேற்ற வலியுடையதன்று ஆதலால் (அதன் மென்மைத் தன்மையை) அறிந்து (தீங்கு நேராவண்ணம் குறிக்கொண்டு) ஆடுவீராக. எ-று.

பேர்தல்— இடம்பெயர்தல். மறிந்தாடுதல் — மேலும் கீழும் புடைபெயர்ந்து புரளுதல். இறைவனது பெருந் திருக்கூத்தின் பெருமையினை விரித்துரைக்கு முகமாக அதன் நுண்மையினையும் குறிப்பினால் உணர்த்தியவாறு அறிந்து மகிழத்தக்கதாம்.

அரங்கமாப் பேய்க்காட்டி லாடுவான் வாளா
இரங்குமோ எவ்வுயிர்க்கும் ஏழாய் — இரங்குமேல்
என்னொகொ வையான்றன் எவ்வுலகம் ஈந்தளியான்
பன்னாள் இரந்தாற் பணிந்து. (78)

அடிபேரிற் பாதாளம் பேரும் அடிகள்
முடிபேரின் மாமுகடு பேருங்— கடகம்
மறிந்தாடு கைபேரின் வான்றிசைகள் பேரும்
அறிந்தாடும் ஆற்ரு தரங்கு. (77)

இ—ள்: எம் இறைவரே, (ஊன்றுமலர்ப் பாதமாகிய) நும் திருவடி சிறிது இடம் பெயருமாயினும் கீழுள்ள உலகுகள் தத்தம் நிலைபெயர்ந்து அழிந்துவிடும் (அண்டமுற நிமிர்ந்தாடும்) நுமது திருமுடி சிறிது இடம் பெயருமாயினும் அண்டமுகடு சிதர்ந் தழியும். கடகம் என்னும் அணி புடைபெயர்ந்து புரளும் நும்முடைய திருக்கைகள் வானிடத்தே சிறிது இடம் பெயரினும் வானமுந் திசைகளும் நிலைகெட்டழிவன. (நீர் ஆடல் புரிதற்கமைந்த பெருவெளியாகிய) இவ்வரங்கு நுமது திருக்கூத்தினைத் தாங்குதற்கேற்ற வலியுடையதன்று ஆதலால் (அதன் மென்மைத் தன்மையை) அறிந்து (நீங்கு நேராவண்ணம் குறிக்கொண்டு) ஆடுவீராக. எ—று.

பேர்தல்— இடம்பெயர்தல். மறிந்தாடுதல் — மேலும் கீழும் புடைபெயர்ந்து புரளுதல். இறைவனது பெருந் திருக்கூத்தின் பெருமையினை விரித்துரைக்குமுகமாக அதன் நுண்மையினையும் குறிப்பினால் உணர்த்தியவாறு அறிந்து மகிழத்தக்கதாம்.

அரங்கமாப் பேய்க்காட்டி லாடுவான் வாளா
இரங்குமோ எவ்வுயிர்க்கும் ஏழாய் — இரங்குமேல்
என்னுகை வையான்ருன் எவ்வுலகம் ஈந்தளியான்
பன்னுள் இரந்தாற் பணிந்து. (78)

இ-ள்: (வேண்டுதல் வேண்டாமையிலான் ஆகிய இறைவனது இயல்பினையறியாத)பேதையே, பேய்கள் வாழும் சுடுகாட்டினையே தனக்குரிய ஆடரங்கமாகக் கொண்டு ஆடும் இறைவன், பலநாளும் அன்பிறாற் பணிந்து வேண்டினாலன்றி (எல்லா வுயிர்களிடத்தும் தான் கொண்ட நடுவு நிலையினை நீங்கி) வறிதே மன மிரங்கி அருள் புரிவானோ? [உயிர்களது அன்பின் திற முணர்ந்து] மனமிரங்கி அருள்புரிய முற்படுவானாறல் [தன்னை வணங்கிய அடியார்களை] எத்தகைய உயர் நிலையில்தான் வைக்கமாட்டான்? எத்தகைய உயர்ந்த வுலகத்தினைத்தான் கொடுத்துக் காத்தருள மாட்டான்? [எல்லாந் தருவன்] எ-று.

பேய்க்காட்டில் அரங்கமா ஆடுவான், பன்னாள் இரந்து பணிந்தால் (அன்றி) எவ்வுயிர்க்கும் வாளா இரங்குமோ எனக் கொண்டு கூட்டிப் பொருள் கொள்க.

'எவ்வுயிர்க்கும் ஆடுவான்' என இயைத்து, எல்லாவுயிர்களுக்கும் பாகம் வருவித்து மும்மலப் பிணிப்பைப் போக்குதற் பொருட்டு ஐந்தொழில் திருக் கூத்தினை ஆடியருள்பவனாகிய இறைவன் எனப் பொருள் கொள்க. எனவே இறைவன் புரிந்தருளும் இத்திருக்கூத்து, விருப்பு வெறுப்பின்றி எவ்வுயிர்க்கும் அருள் சுரக்கும் நிலையில் பொதுமையில் நிகழ்வ தென்றும், இறைவனது திருவருளைச் சிறப்புரிமையிற் பெறவிரும்புவோர் அப்பெருமானைப் பணிந்து இரந்து வேண்டினால் பேரருளாளனாகிய அவ்விறைவன் வேண்டுவார் வேண்டுவன எல்லாம் ஈந்தருள்வான் என்றும், இங்ஙனம் ஏனையோர்க்கன்றி அன்பினால் தன்னைச் சார்ந்தார்க்கே தனிமுறையில் எளிவந்து நலஞ்செய்தல் பற்றி அவ்விறைவன் தனக்குரிய நடுவு

நிலையிற் சிறிதும் வழுவினனல்லன் என்றும் அம்மையார் திருப்பாடலில் குறிப்பாக உணரவைத்தமையறிக.

'சலமிலன் சங்கரன் சார்ந்தவர்க்கலால்
நலமிலன் நாடொறும் நல்குவான் நலன்'

எனவரும் திருப்பாட்டும், இதன் சொல்லையும் பொருளையும் அடியொற்றி,

'சார்ந்தாரைக் காத்தல் தலைவர்கடனாதல்
சார்ந்தாரைக் காத்துஞ் சலமிலனாய்'

எனவரும் சிவஞானபோத வெண்பாவும் இங்கு நினைக்கத் தக்கன.

பணிந்தும் படர்சடையான் பாதங்கள் போதால்
அணிந்தும் அணிந்தவரை யேத்தத்–துணிந்
தென்றும்
எந்தையார்க் காட்செய்யப் பெற்ற விதுகொலோ
சிந்தையார்க் குள்ள செருக்கு. (79)

இ–ள்: (எமது) நெஞ்சத்திற்குள்ள பெருமிதவுணர்வுக்குக் காரணம், விரிந்து படர்ந்த சடையினையுடைய எம்பெருமான் திருவடிகளை (மனமொழி மெய்களால்) வணங்கியும் மலர்மாலைகொண்டு புனைந்து போற்றியும் அங்ஙனம் வழிபட்ட மெய்யடியார்களை அம்முதல்வனெனவே தெளிந்து வழிபடும் துணிவு பெற்றும் இவ்வாறு எமது தந்தையாராகிய இறைவர்க்கு அடித்தொண்டு செய்யப்பெற்ற இதுவோ? எ-று.

சிந்தையார்க்குள்ள செருக்குக்குக் காரணம் ஆட் செய்யப்பெற்ற இதுகொல் என இயைக்க. சிந்தையார்-மனம்; உவப்புப்பற்றி அஃறிணை உயர்திணையாயிற்று. செருக்கு-இறுமாப்பு; ஈண்டு இச்சொல் பெருமிதம் என்ற பொருளில் ஆளப் பெற்று அதற்குரிய காரணத் தினை யுணர்த்தியது. இதுகொலோ என்ற வினு இதுவே எனத் தேற்றப் பொருள்தந்து நின்றது. இறைவனுக்கு ஆட்படுவதென்பது அவனடியார்க்குத் தொண்டுபடுதலே யென்பதும் அத்தகைய திருத் தொண்டே சிவபத்தியுடையார் உள்ளத்திற்கு உயர் வும் உறுதியும் அளிப்பதென்பதும் இத்திருப்பாடலால் இனிது புலனுதல் காணலாம். 'இறுமாந்திருப்பன் கொலோ ஈசன் பல்கணத் தெண்ணப்பட்டுச், சிறுமானேந்திதன் சேவடிக்கீழ்ச் சென்றங்-கிறுமாந் திருப்பன்கொலோ' எனவரும் திருப்பாட்டின் பொருள் இங்கு நினைவுகூரத் தக்கதாகும்.

செருக்கினுல் வெற்பெடுத்த வெத்தனையோ திண்டோள்
அரக்கனையு முன்னின் றடர்த்த — திருத்தக்க
மாலயனுங் காணு தரற்றி மகிழ்ந்தேத்தக்
காலனையும் வென்றுதைத்த கால். (80)

இ-ள்: திருத்தகவிற்குரிய பெருமைவாய்ந்த திருமால் பிரமன் என்னும் இருவருங்காண வியலாது அரற்றி முறையிட்டுத் துதிக்கவும் (அடியார்கள் அன்பினுற்கண்டு) மகிழ்ந்து துதிக்கவும் (தன்னடியார் பொருட்டுக்) கூற்றுவனையும் முன்னின்று உதைத்து வென்ற திருவடிகள், தன்மனத்தெழுந்த அகந்தை யால் திருக்கயிலாய மலையினைப் பெயர்த்தெடுத்த எத்தனையோ பலவாகிய திண்ணிய தோள்களையுடைய

அரக்கனாகிய இராவணனையும் முற்பட்டு நின்று அழுத்தி வருத்தின எ-று.

அரற்றி ஏத்த, மகிழ்ந்து ஏத்த என ஏத்த என்பதனை ஈரிடத்துங் கூட்டுக. ஏத்த முன்னின்று காலனையும் உதைத்து வென்ற கால், அரக்கனையும் அடர்த்த என முடிக்க. காலனையும் என்புழி உம்மை உயர்த்தற்கண் வந்த சிறப்பும்மை. காலனை யுதைத்ததோடன்றி அரக்கனையும் முன்னின்று அடர்த்த என்பது பொருளாகலின், அரக்கனையும் என்புழி உம்மை எச்சப்பொருள் பட வந்தது. அடர்த்த — அடர்த்தன ; அன்சாரியையின்றிவந்த அ..றிணைப் பன்மைமுற்று. இராவணனுக்கு அமைந்த தோள்கள் இருபது என்னுந்தொகையினவாயினும் எண்ணில்லாத தோள்களின் திண்மையும் ஆற்றலும் படைத்தன என்பார் எத்தனையோ திண்தோள் அரக்கனையும் என்றார். இறைவன் திருவடிகள் அன்பர்க்கு அணியனவாய் முன்வந்து அருள்புரியவும் அன்பரல்லாத தீயோரை ஒறுத்து அடக்கவும் வல்லன என அவற்றின் சிறப்புணர்த்தியவாறு.

காலனையும் வென்றோங் கடுநரகங் கைகழன்றோம்
மேலை யிருவினையும் வேரறுத்தோங் — கோல
வரணா ரவிந்தழிய வெந்தீயம் பெய்தான்
சரணா ரவிந்தங்கள் சார்ந்து. (81)

இ-ள்: வனப்புமிக்க முப்புரங்களில் வாழ்ந்த அவுணர்கள் இறந்தொழிய வெம்மைமிகுந்த அனலம்பினை எய்து எரித்தருளிய இறைவனுடைய தாமரை மலர்போலுந் திருவடிகளைச் சார்பாக அடைந்தமையால் அவனடியார்களாகிய நாங்கள் (யாவராலுந்

தடுத்து நிறுத்த முடியாத) கூற்றுவனையும் வென்று உய்ந்தோம். கொடுந்துன்பங்களைத் தரும் நரக அநுபவத்தையும் கைவிட்டு விலகினோம். (பிறவிக்கு ஏதுவாக நிழல்போற் பின்தொடர்ந்து வருத்தும்) பழவினைகளாகிய இருவினைகளையும் வேருடன் களைந்தெறிந்தோம் எ-று.

கோலம் — அழகு. அரணார் — அரணிடத்து வாழ்வோர்; என்றது திரிபுரத்தவுணர்களை. அவிதல்–இறத்தல். சரணாரவிந்தங்கள் – தாமரை மலர் போலுந் திருவடிகள். சரணம்—அடி அரவிந்தம் — தாமரை. சரண அரவிந்தம் சரணாரவிந்தம் என முடிந்தது வடமொழி முடிபு சார்ந்து — சார்ந்தமையால் என ஏதுப்பொருள் தந்தது. காலனையும், இருவினையும் என்றாற்போலக் கடுநரகத்தையும் என இரண்டாமுருபும் உம்மையும் விரித்துரைக்க. கழலுதல் — விட்டு நீங்குதல். கை கழலுதல் என்புழிக் 'கை' என்பது பகுதிப் பொருளைச் சிறப்பித்து நிற்கும் முன்னொட்டாகும். இங்ஙனம் வினை முன் அடைமொழியாய் வருவதனை உபசர்க்கம் என வழங்குதல் வடமொழி மரபாகும். இறைவன் திருவடிகளைச் சார்பாகப் பற்றி வாழ்வோர்க்குப் பிறப்பு இறப்புக்களும் அவற்றுக்குக் காரணமாகிய இருவினையும் அறவே கெட்டொழியும் என்பதனை அம்மையார் தமது அனுபவத்தில் வைத்து உலக மக்களுக்கு அறிவுறுத்தினமை காண்க,

சார்ந்தார்க்குப் பொற்கொழுந்தே யொத்திலங்கிச்
சாராது
பேர்ந்தார்க்குத் தீக்கொடியின் பெற்றியவர்—
நேர்ந்துணரிற்

சூழ்சுடரோன் செங்கதிருஞ் சாயுந் தழல்வண்ணன்
வீழ்சடையே யென்றுரைக்கு மின் (82)

இ-ள் : எல்லாப் பக்கங்களிலும் தாழ்ந்து பரவும் ஒளிக் கற்றைகளையுடைய செஞ்ஞாயிறும் ஒளியாற் பின்னடையச் செய்யும் தீவண்ணனாகிய சிவபெருமானது விரும்பத்தக்க சிவந்த சடையாகிய மின்னல்கள், மனம் பொருந்தி ஆராய்ந்துணருங்கால் அன்பினால் தன்னைச் சார்ந்த அடியார்களுக்குப் பொன்னின் கொழுந்து போன்று ஒளியும் குளிர்ச்சியும் ஒருங்கு தந்து விளங்கி அன்பரல்லாத புறத்தார்க்கு அனற்கொழுந்தினை யொத்து வெம்மை தருவனவாம் எ-று.

கூர்ந்து நோக்குங்கால், இவை மின்னற் கொடிகளல்ல சிவந்த சடைக் கற்றைகளே என ஐயுற்றுத் தெளியும் வண்ணம் அமைந்தது இறைவனது செஞ்சடையென்பார் 'நேர்ந்துணரின்.... வீழ்சடையேயென்றுரைக்கும் மின்' என்றார். இறைவனது சடை மின்னலைப் போன்று விளங்கும் தோற்றத்தை, 'மின் வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் வீழ்சடை' எனப் பொன்வண்ணத் தந்தாதி சிறப்பித்துப் போற்றுதல் காணலாம்.

இனி, இத்திருப்பாடலை இறைவன்பாற் காதல் கொண்டு அப்பெருமானை யடையப்பெறாது அவனது திருவுருவத்தை நினைந்து வருந்தும் தன் மகளது ஆற்றாமையை யெண்ணி யிரங்கும் தாயின் கூற்றாகக் கொண்டு, 'மின்னற்கொடிபோல்வாளாகிய என் மகள், 'இறைவனது செஞ்சடைக் கற்றைகள் அவனைச் சார்ந்த மகளிர்க்குப் பொற்கொடிபோல் விளங்கிச் சாரப் பெறாத என்போலும் மகளிர்க்கு அனற் கொடி போன்று வெந்துயர் விளைப்பனவாயின' என்று புலம்பி

வருந்துகின்ருள்" என ஆறுமுகத் தம்பிரானவர்கள் பொருள் கொண்டதாகச் சிவக்கவிமணியவர்கள் தமது பெரியபுராண வுரையிற் குறிப்பிட்டுள்ளார்கள், இங்ஙனம் பொருள் கொள்ளுமிடத்து 'மின்' என்பதற்கு 'மின்னற்கொடிபோல்வாளாகிய என் மகள் எனப்பொருளுரைக்க. மின் என்பது எழுவாய். உரைக்கும் என்பது பயனிலை.

மின்போலுஞ் செஞ்சடையான் மாலோடு
மீண்டிசைந்தால்
என்போலுங் காண்பார்கட் கென்றிரேல்—
தன்போலும்
பொற்குன்றும் நீல மணிக்குன்றுந் தாமுடனே
நிற்கின்ற போலு நெடிது, (83)

இ-ள்: மின்னலையொத்து மிளிரும் சிவந்த சடையினையுடைய சிவபெருமான் (தன் ஒரு பாகத்தில் விளங்கும் காத்தற் கடவுளாகிய) திருமாலுடன் இங்கு இசைந்து எழுந்தருளினுல் அத்தோற்றம் காண்பார்க்கு எங்ஙனம் திகழும் எனக் கேட்பீராயின், தனக்குத் தானே யொப்பென விளங்கும் பொன்மலையும் நீலநிறம் வாய்ந்த மணிமலையும் ஒருங்கிசைந்து மிகவுயர்ந்து விளங்குந் தோற்றத்தை யொப்பதாகும். எ-று.

இறைவனும் திருமாலும் ஒருங்கு திகழுந் தோற்றம் பொன்மலையும் நீல மலையும் ஒருங்கிசைந்த தோற்றத்தை ஒக்கும் என்பது கருத்து.

நெடிதாய பொங்கெரியுந் தண்மதியு நேரே
கடிதாங் கடுஞ்சுடரும் போலுங்— கொடிதாக

விண்டார்கள் மும்மதிலும் வெந்தீ யினிலழியக்
கண்டாலு முக்கண் ணுங் கல். (84)

இ-ள்: இறைவனுடைய கண்கள், (கொடுவினையைச் செய்து இறைவனோடு) மாறுபட்டவர்களாகிய அவுணர்களுடைய முப்புரங்களும் வெம்மைமிக்க தீயினால் அழிந்தொழியக் கண்டனவாயினும், சுடர்விட்டுப் பொங்கியெரியும் தீயும் குளிர்ச்சி தரும் மதியும் தன்னெதிர்ப்பட்ட பொருள்களிற் பரவும் கடுவெயிலையுடைய ஞாயிறும் ஆகிய முச்சுடர்களைப் போன்று முறையே அழித்தலும் தண்ணருள் செய்தலும் நோய் நீக்கிக் காத்தலும் ஆகிய மூவகை யியல்புகளும் ஒருங்குடைமையால் முக்கண்கள் எனப்போற்றப் பெறுவனவாயின எ-று.

கண் மும்மதிலும் தீயினில் அழியக்கண்டாலும் பொங்கெரியும் தண்மதியும் கடுஞ்சுடரும் போலும் முக்கண்ணும் என முடிக்க, கடுஞ்சுடர்— கடுங்கதிராகிய சூரியன்.

கண்ணாரக் கண்டுமென் கையாரக் கூப்பியும்
எண்ணார எண்ணத்தால் எண்ணியும் — விண்ணோன்
எரியாடி யென்றென்றும் இன்புறுவன் கொல்லோ
பெரியானைக் காணப் பெறின். (85)

இ-ள்: (பிறவாயாக்கைப்) பெரியோனாகிய இறைவனை (அவனருளாற்புறத்தே) காணப் பெறுவேனாயின் அவனது திருமேனியழகினை என் கண்களால் நிறையப் பருகியும் என் கைகள் குளிரும் வண்ணம் அவன் திருவடிகளைப் பலமுறை கைகூப்பி வணங்கியும் அவனது திருவருட் பெருமையினை நெஞ்சார

நினைந்தும், விண்ணகத்தில் விளங்குபவனே, தீயின் நடுவே திருக்கூத்தியற்றுபவனே என அவ்விறைவனது பெரும் புகழை எனது நாவினாற் பலமுறை சொல்லியும் இன்புறுவேனல்லவா? எ-று.

எற்புடம்பு தாங்கிய அம்மையார், கயிலையில் வீற்றிருந்தருளும் இறைவனது திருவோலக்கக் காட்சியைக் கண்ணாரக் காணவேண்டுமென்னும் பேரார்வத்துடன் விரைந்து செல்லும்பொழுது அற்புதத்திருவந்தாதியாகிய இதனைப் பாடிக்கொண்டு செல்கின்றாராதலின், 'பெரியானைக் காணப்பெறின் அவனை மன மொழி மெய்களாகிய முக்கரணங்களாலும் வழிபட்டு இன்புறுவேனல்லவா' என இனி, தாம் பெறவிருக்கும் சிவானந்தப் பெரும் பயனை உலகமக்களுக்கு வெளியிட்டருள்கின்றார். பெரியான் - தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாத தனி முதல்வன்; மகாதேவனாகிய சிவன் என்பது பொருள். ஆர்தல் - அங்கங்களினாற் பெறக் கூடிய பயனை முற்றும் நிரம்பப் பெறுதல்.

பெறினும் பிறிதியாதும் வேண்டேம் நமக்கீ
துறினு முறாதொழியு மேனும் — சிறிதுணர்த்தி
மற்றொருகண் நெற்றிமேல் வைத்தான்றன் பேயாய
நற்கணத்தி லொன்றாய நாம். (86)

இ-ள்: பிறரெவர்க்கும் இல்லாத ஒப்பற்ற அனற் கண்ணினைச் சிறிதே விழிக்கச் செய்து தனது நெற்றியிற்கொண்டருளிய சிவபெருமானது பேய்ச்சுற்றமாகிய நல்ல சிவகணங்களுள் ஒன்றாய் விளங்கும் நாம், நமக்கு இப்பேய் வடிவு என்றும் பொருந்தியிருந்தாலும் அன்றி இடைக்காலத்தில் நம்மைவிட்டு நீங்கினாலும்

அன்றி இதனினும் சிறந்த பிறிதோருடம்பு நாம் கேளாமலே வந்து கிடைத்தாலும் இப்பொழுது பெற்றுள்ள பேய்வடிவாகிய இதனையன்றி வேறெதனையும் விரும்ப மாட்டோம் எ-று.

ஈது - நற்கணத்துள் ஒன்றாய இப்பேய் வடிவு. நற்கணத்துள் ஒன்றாய நாம் நமக்கு ஈது உறினும் உறுதொழியுமேனும் பிறிதொன்று பெறினும் யாதும் வேண்டேம் என இயைத்துரைக்க. இங்ஙனம் இறைவனுக்கு அடித்தொண்டராக அணுகி நின்று போற்றி மகிழும் பேறு, முத்தி நிலையிலும் வாய்ப்பதரிதாகலால் நற்கணத்திலொன்றாய இப்பேய்வடிவே தம் உள்ளத்திற்கு உவகை அளிப்பதென அம்மையார் அருளிச் செய்தமை, 'கூடும் அன்பினிற் கும்பிடலேயன்றி, வீடும் வேண்டா விறலின் விளங்கிய' அவர்தம் பேரன்பின் திறத்தைப் புலப்படுத்துவதாகும். சிறிது உணர்த்தி-சிறிதே விழிக்கச்செய்து.

நாமாலை சூடியு நம்மீசன் பொன்னடிக்கே
பூமாலை கொண்டு புனைந்தன்பாய் — நாமோர்
அறிவினையே பற்றினா லெற்றே தடுமே
யெறிவினையே யென்னு மிருள். (87)

இ-ள்: இறைவனுக்குத் தொண்டு பூண்ட அடியார்களாகிய நாம் நம்மையுடையவனாகிய இறைவன் திருவடிக்கே சொன்மாலை சூடிப் போற்றியும் நறுமணம் வாய்ந்த மலர்மாலை கொண்டு அணிந்தும் இறைவனது திருவடி ஞானமாகிய மெய்யுணர்வினையே பற்றுக்கோடாகப் பற்றி ஒழுகுவோமானால் கருவியாற் பிளந்து எறிவதுபோலும் தீவினையாகிய இருள் நம்மை வருத்துமோ? அவ்விருள் நம்பால் நிற்பது எங்ஙனம்? நில்லாது இறந்தொழியுமன்றே எ-று.

நாமாலை—நாவினால் புனையப் பெறும் சொல்மாலை. இறைமைக் குணங்கள் இலராய ஏனைத் தேவர்களை வழிபடுதலை யொழிந்து பொருள்சேர் புகழுடைய நம் இறைவன் பொன்னடிக்கே வழிபாடு செய்க என்பது கருத்தாகலின் 'நம்மீசன் பொன்னடிக்கே' என்புழி ஏகாரம் பிரிநிலை. புனைந்தும் என உம்மை விரித்துரைக்க. எற்று என்பது 'இறந்தது' என்னும் குறிப்புப் பொருள்பட வந்த இடைச்சொல்; 'எற்றென் கிளவி யிறந்தபொருட்டே' என்பது தொல்காப்பியம்.

இருளி னுருவென்கோ மாமேக மென்கோ
மருளின் மணிநீல மென்கோ—அருளெமக்கு
நன்றுடையாய் செஞ்சடைமேல் நக்கிலங்கு வெண் மதியம்
ஒன்றுடையாய் கண்டத் தொளி. (88)

இ-ள் : எவ்வுயிர்க்கும் நலஞ்செய்யும் பேரருளுடைய பெருமானே, செந்நிறம் வாய்ந்த சடையினிடத்தே ஒளிவிட்டு விளங்கும் வெண்மதியினை ஒப்பற்ற அணிகலமாக அணிந்தவனே, நினது திருநீல கண்டத்தின் ஒளியினை இருளின் வண்ணம் என்று கூறுவேனோ? (கரு நிறத்துடன் உலகத்திற்குப் பயன் விளைத்தலாகிய உருவும் பயனும் கருதி) கரிய மேகம் என்று கூறுவேனோ? (உயிர்கள் பால் அமைந்த அவித்தையாகிய மயக்கத்தை நீக்குந் தொழிலுடைமை பற்றி) மருளைக் கெடுக்கவல்ல ஆற்றலமைந்த நீல மணியென்பேனோ? (இன்னதென்று உவமை சொல்ல அறிகின்றிலேன்) இறைவனாகிய நீயே இன்ன தன்மைத்தென எம்மனோர்க்குப் பணித்தருள்வாயாக எ-று.

கருமையாகிய நிறப்பண்பு ஒன்றே பற்றி இருளும், கருநிறத்துடன் உலகிற்கு உணவு முதலிய நலங்களை விளைத்தல்பற்றி மாமேகமும், காண்போரது மயக்கத்தைப் போக்கி அருளாகிய நல்லொளியினை வழங்குதல் பற்றி மருள் இல்லாத நீலமணியும் இறைவனது நீல கண்டத்திற்கு உவமையாகக் கூறப்பட்டன.

உயிர்களது மயக்கத்தைப் போக்கவல்ல நீலமணியொன்று உளதாயின் அது இறைவனது திருமிடற்றுக்கு உவமை கூறத் தக்கதென்பார், 'மருள் இல்மணி நீலம்' என்றார். இல்—இல்லையாகச் செய்கிற.

ஒளிவிலி வன்மதனை யொன்பொடியா நோக்கித்
தெளிவுள்ள சிந்தையினிற் சேர்வாய்—ஒளிநஞ்சம்
உண்டவா யஃதிருப்ப வுன்னுடைய கண்டமிருள்
கொண்டவா றென்னிதனைக் கூறு. (89)

இ-ள்: ஒளி பொருந்திய வில்லை யேந்தியவனாகிய மன்மதனை அழலால் வெந்து சாம்பராகும்படி நோக்கி, (காமம், வெகுளி, மயக்கமாகிய மன மாசுகள் நீங்கித்) தெளிவு பெற்ற அடியார்களது திருந்திய சிந்தையிலே எழுந்தருளியுள்ள பெருமானே, வானோர்கள் அஞ்சி ஓடியொளித்தற்குக் காரணமாகிய ஆலகால நஞ்சத்தை உட்கொண்ட நினது திருவாய் நிறமாறாதிருக்க, நின் திருமிடறு மட்டும் இருள் நிறம் பெற்று உருமாறியது என்னையோ? இம்மாறுபாட்டுக்குரிய காரணத்தினை விளங்கக் கூறுவாயாக-எ-று.

நின் திருமிடற்றிலுள்ள கருமை நிறம் நீயுட் கொண்ட நஞ்சின் கொடுமையினால் ஏற்பட்டிருக்குமானால் அந்நஞ்சினை முதன் முதல் கொண்ட நின் வாயும் நிறத்தால் மாறுபட்டிருக்கவேண்டும். நின்

திருவாயானது நஞ்சினை யுட்கொள்ளுதற்கு முன் தோன்றியது போலவே தன்னியல்பில் என்றும் மாருது விளங்குதலால் நினது திருமிடற்றின் கருப்பு நஞ்சத்தின் வெம்மையால் ஏற்பட்டதன்றெனவும், எம்பெருமாஞகிய நீயே இடர்விளைக்கும் நஞ்சினையும் எழில்தரும் தோற்றமுடன் நின் திருமிடற்றில் அடக்கிக்கொண்ட பெருங்கருணையின் வண்ணமே நின் திருமிடற்றிலமைந்த கருநிறமெனவும் நின்னடியார்களாகிய யாங்கள் நன்குணர்வோம் என அம்மையார் இறைவன் திருவருளை வியந்து போற்றியவாறு. 'வில்லி' என்ற சொல் 'விலி' என இடைக்குறையாய் நின்றது. அழலால் வெந்து அவியும் நிலையில் ஒளியுடையதாய்த் தோன்றுதல் பற்றி 'ஒண்பொடி' என்ருர். தெளிவுள்ள சிந்தையில் இறைவன் எழுந்தருளியிருக்குந் திறத்தைச் 'சிந்தையுந் தெளிவுமாகித் தெளிவினுட் சிவமுமாகி' எனத் திருநாவுக்கரசர் இனிது விளக்குதல் காண்க.

கூறெமக்கீ தெந்தாய் குளிர்சடையை மீதழித்திட்
டேற மிகப்பெருகின் என்செய்தி—சீறி
விழித்தூரும் வாளரவும் வெண்மதியு மீர்த்துத்
தெழித்தோடுங் கங்கைத் திரை. (90)

இ-ள்: எமது தந்தையாகிய பெருமானே, சினந்து நோக்கி எதிரேறிச் செல்லும் கொடிய பாம்பினையும் வானத்தி லுதித்ததாகிய திங்களையும் தன் வேகத்தால் இழுத்து முழக்கமிட்டுச் செல்லும் கங்கையின் பெருவெள்ளமானது, குளிர்ச்சிமிக்க நின் சடைக் கற்றைகளாகிய வன்கரையினை ஊர்ந்து அழிக்கும் நிலையில் மிக்குப் பெருகுமாயின் அதனைத்

தடுத்தற்கு எத்தகைய உபாயத்தை மேற்கொள்வாய்? அதனை எமக்குக் கூறுவாயாக-எ-று.

எந்தாய், அரவும் மதியும் ஈர்த்துத் தெழித்து ஓடும் கங்கைத் திரை, சடையை அழித்திட்டு ஏறப் பெருகின் என் செய்தி? ஈது எமக்குக் கூறு என இயைத்துரைக்க.

தெழித்தல்-உரப்புதல்; முழங்குதல். பெருகின் என்பது பெருகாது என்பது பட நின்றது. இதனால் கங்கையின் வேகங்கெடுத்தாண்ட இறைவனது பேராற்றல் விளக்கப் பெற்றமை காண்க.

திரைமருவு செஞ்சடையான் சேவடிக்கே யாளாய்
உரைமருவி யாமுணர்ந்தோங் கண்டீர்—தெரியினே
இம்மைக்கும் அம்மைக்கும் எல்லாம் அமைந்தோமே
எம்மைப் புறனுரைப்ப தென். (91)

இ-ள்: அலைகளையுடைய கங்கையாற்றினைத் தன்பாற்கொண்ட சிவந்த சடையினையுடைய சிவபெருமானது திருவடிக்கே ஆட்பட்டு அவ்விறைவனது பொருள்சேர் புகழைப் போற்றித் துதித்து அப்பெருமானைத் தியானிக்கப் பெற்றேம். இதனால் இவ்வுலக வாழ்வுக்கும் இனி எய்தவிருக்கும் வீடுபேற்றின்பத்திற்கு வேண்டிய எல்லா நலங்களும் இப்பொழுதே அமையப் பெற்றேம். இவ் வழிபாட்டினாலுளதாம் பயனைத் தெரிந்துகொள்வீராக. இனி எம்மைப் புறங்கூறுதற்குக் காரணமாக எம்மிடத்துள்ள குற்றம் யாது? (ஒன்றுமில்லை) எ-று.

திரை-அலை; அலைகளையுடைய கங்கையாறு. உரை-புகழ். கண்டீர்-முன்னிலையசை. என் என் என்றாகி இன்மை குறித்து நின்றது.

என்னை யுடையானும் ஏகமாய் நின்றானும்
தன்னை யறியாத தன்மையனும் – பொன்னைச்
சுருளாகச் செய்தனைய தூச்சடையான் வானோர்க்
கருளாக வைத்த வவன். (92)

இ–ள்: எளியேனையும் தனக்கு அடிமையாக ஏற்றுக்கொண்ட தலைவனும் (எல்லாவுயிர்களுக்கும் உயிர்க்குயிராய் உள்நின்று அருள்சுரத்தலால்) ஒப்பற்ற தனி முதல்வனாகத் திகழ்பவனும் தன்னை இன்ன தன்மையன் என யாவராலும் தெளிந்தறிய வொண்ணாத அருமை நலம்வாய்ந்தவனும் (ஆகிய இறைவன் யாவனெனின்) பொன்னைச் சுருள் சுருளாகச் செய்து வைத்தாற் போன்ற தூய செஞ்சடையுடைய வனும், தேவர் முதலியோர்க்கு அருள் சுரத்தல் வேண்டித் தனது திருவருளை நிரம்ப வைத்தவனும் ஆகிய அவனே (சிவபெருமானே) எ–று.

ஏகமாய் நின்றான்-ஒருவனாய் உலகேத்த நின்றான்; உயிர்களோடு ஒற்றித்துப் பிரிவற நின்றான் எனினும் பொருந்தும். தன்னையறியாத தன்மையன் - தன்னை இன்னதன்மையன் என யாவராலும் அறியவொண்ணாத நிலையில் அப்பாற்பட்டு விளங்குபவன்; இனி, தன் பெருமைதானறியாத நிலையில் தன் அடியார்களுக்கு எளிவந்தருள்புரிபவன் எனினும் பொருந்தும். 'இன்ன தன்மையன் என்றறியொண்ணா எம்மானை, எளிவந்த பிரானை' என நம்பியாரூரரும் 'தம்பெருமைதானறியாத் தன்மையன்காண்' எனத் திருவாதவூரடிகளும் அருளியன இங்குச் சிந்திக்கத்தக்கன.

அவன்கண்டாய் வானோர் பிரானாவா னென்றும்
அவன்கண்டாய் அம்பவள வண்ணன் — அவன்
கண்டாய்

மைத்தமர்ந்த கண்டத்தான் மற்றவன்பால்
நன்னெஞ்சே
மெய்த்தமர்ந்தன் பாய்நீ விரும்பு. (93)

இ - ள் : சிவபெருமானாகிய அவனே வானோர்க்கெல்லாந் தலைவனாகிய மகாதேவன். எக்காலத்தும் பவளம் போன்று திகழும் செம்மேனியையுடைய பெருமானும் அவனே. நஞ்சின் கருமை நிறமுடையதாய்த் திகழும் திருநீலகண்டத்தை யுடையவனும் அவனே. நல்லியல் புடைய நெஞ்சமே, அத்தகைய இறைவன் பால் நீ மெய்மையுடையையாய்ப் பொருந்தி அன்புடையையாய் விரும்பி ஒழுகுவாயாக எ-று.

'அவன் கண்டாய்' என மூன்றிடங்களிலும் வந்த 'கண்டாய்' என்பது முன்னிலையசை அவனே எனத் தேற்றப் பொருள்தந்து நின்றமை காண்க.

விருப்பினால் நீபிரிய கில்லாயோ வேறா
இருப்பிடமற் றில்லையோ வென்னே — பொருப்பன்
மகள்
மஞ்சுபோல் மால்விடையாய் நிற்பிரிந்து வேறாக
அஞ்சுமோ சொல்லா யவள். (94)

இ-ள் : மேகம்போலும் கரிய திருமேனியையுடைய திருமாலை இடபமாகக் கொண்டருளிய இறைவனே, மலையரசன் மகளாராகிய உமாதேவியார்பால் நீ வைத்த பெருவிருப்பங் காரணமாக அவரைப் பிரிதலாற்றாது நினது ஒருபாகத்திற் கொண்டனையோ? அன்றி அவ்வம்மையார் நின்னைப் பிரிந்து தனித்திருத்தற்கு அஞ்சுவரோ ? அன்றி அவ்வம்மையார் இருத்தற்கெனத் தனியிடமொன்றும் கிடைத்திலதோ? (நீவிர் இருவரும்

ஒருடம் பினராயிருத்தற்குரிய காரணத்தைச் சொல்வா யக) எ-று,

இறைவனுகிய நீயோ, வேண்டுதல் வேண்டாமை யிலாருதலால் நினது விருப்பத்தால் உமாதேவியாரை ஒரு பாகத்திற் கொண்டுள்ளாய் எனக் கூறுதற்கு இட மில்லை. இனி உமாதேவியாராகிய அவ்வம்மையாரோ, வானளவோங்கிய வளமார்ந்த மலை முழுவதையும் தனக்கே யுரிமையாகக் கொண்டு ஆட்சி புரியும் மலை யரசனுக்குத் திருமகளாகத் தோன்றித் தன் தந்தையின் அரசுரிமையை ஏற்று நடத்த வல்ல பேராற்றலும் நிலப் பரப்பும் ஒருங்குடையாராதலால் அச்சத்தாலோ வேறு இடமின்றியோ நின் ஒரு பாகத்தில் ஒன்றிவாழ்கின்ருர் எனக் கருதுதற்கும் இடமில்லை. எனவே பிறிது காரணமின்மையின் நீவிர் இருவீரும் தீயின் வெம் மையும் நீரின் தண்மையும் போன்று பிரிப் பின்றி அம்மையப்பரென ஒருவராய்த் திகழ்வதே நும்மிருவர்க்குந் தொன்று தொட்டுளதாம் தொன்மை யியல்பெனவே யாம் கொள்வோம் என்பது கருத்து. விளுவாய் வந்த ஓகாரம் மூன்றும் குறிப்பிளுல் எதிர் மறைப்பொருளைத் தந்து நின்றன.

அவளோர் குலமங்கை பாகத்தகலாள்
இவளோர் சலமகளுமீதே — தவளநீ
றென்பணிவீ ரென்றும் பிரிந்தறியீர் சுங்கிவருள்
அன்பணியார் சொல்லுமினிங் கார் (95)

இ-ள்: வெள்ளிய திருநீற்றினையும் எலும்பு மாலை யையும் அணிந்தருளிய இறைவரே, ஒப்பற்ற உயர்குடி யிற்ருேன்றிய மலைமகளாராகிய அவரோ நுமது இடப் பாகத்தினின்றும் பிரியாதுள்ளார். இங்ஙனமே நீருரு வாகிய கங்கை நங்கையும் நும் திருமுடியினின்றும்

நீங்கார். இவ்விருவருள்ளே நும்பால் அன்பினால் அணி யராய் வாழும் உரிமையுடையார் யாவர்? சொல்வீ ராக எ-று.

என்றும் நும் திருவருள் வண்ணமாய்த் திகழும் திருநீற்றினோடு, ஊழிக் காலமாகிய கால முடிவிலே இறந்தொழிந்த பிரம விட்டுணுக்களின் எலும்பினையும் ஒப்ப அணியும் இயல்புடையீராதலின், நும்முடன் பிரிப்பின்றித் திகழும் உரிமையுடைய குலமகளாராகிய உமாதேவியாரோடு இடைக்காலத்தே வந்தடைந்த சல மகளாகிய கங்கையையும் ஒப்ப வைத்துப் போற்று கின்றீர் என்பதனை யாம் குறிப்பினால் உணர்வோம் என்பார் 'தவள நீறு என்பு அணிவீர்' என அழைத்தார். தவளம் - வெண்மை. குலமகள், சலமகள் என்பன முறையே உமா தேவியாரையும் கங்கையையும் உணர்த்தி நின்றன. இவ்விரண்டும் முறையே குலப் பெண், வஞ்சனையுடைய பெண் என வேறொரு பொரு ளுந் தந்து முரண்பட நின்றமை காண்க. சலம் - நீர், வஞ்சனை.

ஆர்வல்லார் காண அரனவனை யன்பென்னும்
போர்வை யதனாலே போர்த்தமைத்துச் — சீர்வல்ல
தாயத்தால் நாமுந் தனிநெஞ்சி னுள்ளடைத்து
மாயத்தால் வைத்தோம் மறைத்து. (96)

இ - ள்: அரன் என்னும் திருநாமமுடைய இறை வனை அன்பாகிய போர்வையினாலே போர்த்து அவனது பொருள்சேர் புகழைப்பாடிப் போற்றவல்லோம் என்ற உரிமை காரணமாக அவனடியார்களாகிய நாமும் அப் பெருமானை அயலவர் அறியாத வண்ணம் நமது மன மாகிய தனியிடத்திலே மறைவாக அடைத்துவைத்துப்

போற்றினோம். இனி அப்பெருமானைப் புறத்தே காண வல்லார் யார்?

அரன் – எல்லா உலகங்களையும் முடிவில் அழித்து ஒடுக்குபவன். இறைவனுக்கு ஆட்பட்ட மெய்யடியார்கள் இறைவனது திருவருளின்பத்தில் திளைத்து மகிழும் நிலையில் தமக்குள் கூறுவதாக அமைந்தது இத் திருப்பாடல் "நாடி நாரணன் நான்முகனென்றிவர் தேடியுந் திரிந்துங் காணவல்லரோ மாடமாளிகை சூழ்தில்லையம்பலத்தாடி பாதமென் நெஞ்சுளிருக்கவே" எனவரும் அப்பர் சுவாமிகள் அருளிச் செயல் இங்கு ஒப்பு நோக்கத் தகுவதாகும். சீர் – இறைவனது மெய்ப்புகழை விரித்துரைக்குந் தெய்வப் பாடல்கள். தாயம் – உரிமை, பாடப்பெறும் தலைவனுக்கும் பாடுவார்க்கும் இடையே யமைந்த அன்பின் கிழமை, மாயம் –மறைப்பு.

மறைச்துலக மேழினிலும் வைத்தாயோ வன்றேல்
உறைப்போடு முன்கைக் கொண்டாயோ—
நிறைத்திட்
டுளைந்தெழுந்து நீபெரிப்ப மூவுலகு முள்புக்
களைந்தெழுந்த செந்தீ யழல். (97)

இ-ள் : இறைவனாகிய நீ முப்புரங்களையும் எரித்த போது தோன்றிய தீச்சுடர்கள் மூவுலகங்களையும் அழற்கதிரால் நிறைத்து மேலெழுந்து வருத்தி அவற்றினுள்ளேயும் ஊடுருவிப் புகுந்து விரவித் தோன்றின இத்தகைய பெருந்தீயினை ஒருவரும் அறியாதபடி ஏழுலகங்களிலும் முன்னரே மறைத்து வைத்திருந்தனையோ? இங்ஙனமன்றேல் எங்கும் பரவிச் செல்லும்

பெருந்தீப் பிழம்பு முழுவதையும் இறுகச்செறித்துக் கையினுற் பொறுக்கு மியல்புடையதாக்கி நின் திருக் கரத்தில் ஏந்திக் கொண்டனையோ? எ-று.

அழலாட வங்கை சிவந்ததோ வங்கை
அழகால் அழல் சிவந்த வாரூே — கழலாடப்
பேயாடு கானிற் பிறங்க வனலேந்தித்
தீயாடு வாயிதனைச் செப்பு. (98)

இ-ள்: பேய்கள் ஆடுகின்ற காட்டினிடமாகத் தீயின் நடுவே நின்று, ஒளிவிளங்குந்தீயினைக் கையி லேந்தி வீரக்கழல் ஒலிக்க ஆடவல்ல பெருமானே, நினது அழகிய கையானது இடைவிடாது தீயினையேந் திப் பழகினமையால் செம்மை நிறமுற்றதோ? அல்லது நின் திருக்கரத்தின் அழகினைப் பொருந்தினமையால் அந்நெருப்புத்தான் செம்மை நிறத்தைப் பெற்றதோ? இதனைத் தெளிவாகக் கூறுவாயாக. எ-று.

ஆடுதல் — பொருந்திப் பழகுதல். இறைவன் தீவண்ணனுகத் திகழும் திருமேனிப் பொலிவினை அம்மையார் புனைந்து போற்றியவாறு.

செப்பேந் திளமுலையாள் காணவோ தீப்படுகாட்
டப்பேய்க் கணமவைதாங் காணவோ—செப்பெனக்
[கொன்
ருகத்தா னங்காந் தனலுமிழு மைவாய
நாகத்தா யாடுன் னடம். (99)

இ-ள்: வாயைத் திறந்து தீப்போலும் நஞ்சினை யுமிழும் ஐந்தலை நாகத்தினை நின் திருமேனியில் அணிந்துள்ள பெருமானே, ஆடுகின்ற நினது திருக் கூத்து, செப்பினை யொத்துத் தோன்றும் கொங்கை

யினையுடைய உமாதேவியார்கண்டு மகிழ்தற்பொருட்டு நிகழ்வதோ? அன்றி நின்னைச் சூழ்ந்து போற்றும் பேய்க் கணங்களாகிய அவை கண்டு மகிழ்தற் பொருட்டு நிகழ்வதோ? இவ்விரண்டுள் இதுவென எனக்கு ஒரு தலையாகச் சொல்வாயாக. எ-று.

பேய்க்கணம் சூழ்ந்து காண ஆடுதல் உலகினை ஒடுக்குதற் பொருட்டெனவும், உமையம்மை காண ஆடுதல் ஒடுங்கிய உலகினை மீளத் தோற்றுவித்தற் பொருட்டெனவும் குறிப்பான் விளக்குவார் 'தீப்படு காட்டு அப்பேய்க்கணம்' என்றும் 'செப்பேந்திள முலை யாள்' என்றும் அடை கொடுத்தோதினார்.

நடக்கிற் படிநடுங்கு நோக்கிற் றிசைவேம்
இடிக்கி னுலகனைத்து மேங்கும்—அடுக்கற்
பொருமேறே வானேறே பொன்னொப்பாய் நின்னே
றுருமேறே வொன்றா வுரை. (100)

இ-ள்: பொன்னிறம்வாய்ந்த திருமேனியையுடைய இறைவனே, நினது ஊர்தியாகிய இடபம் நிலத்தின் மேல் மெதுவாக நடந்துசென்றாலும் அதனைப்பொறுக்க லாற்றாது பூமி நிலைகுலைந்து அதிரும். அவ்வூர்தி சினந்து நோக்குமானால் அப்பார்வையினால் திசைகளி லுள்ளன யாவும் வெந்தழியும். உரத்துக் கனைக்கு மானால் அவ்வொலியினால் எல்லா வுலகங்களும் அஞ்சி யேங்கும். ஆதலால் நின் ஊர்தியாகிய அது மலை யொடு போர்செய்ய வல்ல மதயானையோ? இட யேறோ? அல்லது ஆனேறாகிய இடபந்தானோ? இவற் றுள் இதுவென உறுதியாகச் சொல்வாயாக. எ-று.

அடுக்கல் — மலை. அடுக்கற் பொரும் ஏறு - மலையொடு பொருது நிற்கும் இயல்புடைய மதயானை, இனி மலை முழையில் வாழும் சிங்க ஏறு எனப் பொருள்கோடலும் பொருந்தும். இடித்தல் - கனைத்து உரப்புதல்.

உரையினால் இம்மாலை யந்தாதி வெண்பாக்
கரைவினாற் காரைக்காற் பேய்சொற்—பரவுவார்
ஆராத வன்பினோ டண்ணலைச் சென்றேத்துவார்
பேராத காதல் பிறந்து. (101)

இ-ள் : நெஞ்சக் கனிவினால் காரைக்காற்பேயார் பாடிய இவ்வெண்பா அந்தாதியாகிய சொன்மாலையினால் சிவபெருமானாகிய இறைவனை ஆராத பேரன்புடன் போற்றிப் பரவும் அடியார்கள் என்றும் நிலை பெயராத பெருங் காதல் தோன்றிப் பெருக அவ் விறைவனை யடைந்து ஏத்தி மகிழும் பேரின்பத்தில் திளைத்தின் புறுவர்-எ-று.

வெண்பா அந்தாதி மாலையாகிய இவ்வுரையினால் பரவுவார், பேராத காதல் பிறந்து அண்ணலைச் சென்று ஏத்துவார் என முடிக்க. பேராத காதல்—இறவாத இன்ப அன்பு.

திருச்சிற்றம்பலம்

—

